உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-40
துன்முகி-ஆடி-4
19-7-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## குறிஞ்சி

வரைதல் வேட்கையுற்ற தலைவி, தோழியை நோக்கி வழியினது ஏதங் கூறித் தலைவனுக்கு வரைந்தெய்தும்படி சொல்லுவாயாக என்றது.

கழுதுகால் கிளர வூர்மடிந் தன்றே, யுருகெழு மரபிற் குறிஞ்சி பாடிக், கடியுடை வியனகர்க் கானவர் துஞ்சார், வயக்களிறு பொருத வாள்வரி வேங்கை, கன்முகைச் சிலம்பிற் குழுமு மன்னே, மென்றோ ணெகிழ்ந்துநாம் வருந்தினு மின்றவர், வாரா ராயினோ நன்றுமற் றில்ல, வுயர்வரை யடுக்கத் தொளிறுபு மின்னிப், பெயல்கான் மயங்கிய பொழுதுகழி பானாட், டிருமணி யரவுத்தேர்ந் துழல, வுருமுச் சிவந் தெறியு மோங்குவரை யாறே -255 :-ஆலம்பேரி சாத்தனார்

பேய்கள் விளக்கமுற்றியங்க ஊர் முழுவதும் துயில்கொண்டு விட்டது. அச்சம் உண்டாகும் தன்மையுடன் குறிஞ்சிப் பண்ணைப் பாடிக்கொண்டு அகன்ற இவ்வூரைக் காவல்செய்கின்ற கானவர் யாரும் துயில்வாரல்லர். வலிமைமிக்க களிற்றி யானையோடு பொருத வாள்போன்ற கோடுகளையுடைய புலிகள் அறுகல் மிக்க மலையடியில் முழங்கும். உயர்ந்த மலைப்பக்கத்தில் விளங்கி மின்னி மழைபெய்தல் மயங்கிய, பொழுது கழிந்த நடு யாமத்தில், பாம்பு தன்னிடத்திலுள்ள அழகிய மணியைச் சிக்கி வருந்தி யுழலும்படி சினந்து இடி முழங்கி மோதும். மெலிய தோள் நெகிழ்ந்து நாம் வருந்துவதாயினும் அவர் வாராராயின் அதுவே மிக நல்லதாகும். -பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்
குருவளர் பூங்குமிழ் கோங்குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ
மருவளர் மாலையோர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்
துருவளர் காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே

:-திருக்கோவையார்-1

உரை:-'திருவளர்-திரு வளருகின்ற, தாமரை-தாமரைப் பூவையும், சீர்வளர்-சிறப்பு வளருகின்ற, காவிகள் - நீலோற்பல மலர்களையும், ஈசர் தில்லை-இறைவராகிய நடேசப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற தில்லை வரைப்பில் உண்டாகிய, குருவளர்-நிறம் வளருகின்ற, பூங்குமிழ்-பூங்குமிழ்ப் பூவையும், கோங்கு - கோங்கரும்புகளையும், பைங் காந்தள் - பசிய காந்தட் பூக்களையும், கொண்டு-உறுப்புக்களாகக் கொண்டு, ஓங்கு-மேலாகிய, தெய்வ மரு வளர் - தெய்வ மணம் வளருகின்ற, மாலை-மாலையானது, ஓர் வல்லியின் ஒல்கி-ஒரு கொடியைப்போல நுடங்கி. அன நடை வாய்ந்து - அன்னத்தின் நடை வாய்க்கப் பெற்று, உரு வளர்-அழகு வளருகின்ற, காமன் தன்-காம வேளினது, வென்றிக் கொடி போன்று-வெற்றிக்கொடியை ஒத்து, மிளிர்கின்றது-விளங்குகின்றது' என்பதாகும்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் மாணிக்கவாசக சுவாமிகளால் அருளிச் செய்யப் பெற்ற, எட்டாந் திருமுறையாகிய திருவாசகத்தைப் பல சிறு நூல்களின்தொகுதி என்று சொல்வது பொருந்தும். சிவபுராணத்தில் தொடங்குகின்ற திருவாசகம் திருக்கோவையாரில் முடிவுபெறுகிறது.

போற்றித் திருவகவல், திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம்,

திருத்தசாங்கம் முதலிய தலைப்புக்களைப் பார்த்தால், சிற்றிலக்கியங்களின் தொகுதி திருவாசகமென்பது நன்கு புலப்படும். திருவாசகத்தின் இறுதி நூலாகிய திருக்கோவையார், பிரபந்த வகைகளிற் பெரியதாகிய கோவைப் பிரபந்தமாக அமைந்து, ஆசிரியர் அறிவுறுத்த எடுத்துக்கொண்ட சன்மார்க்கமென்னும் ஞானநெறியினைத் திறம்பட எடுத்துணர்த்திக்கொண்டிருக்கின்றது.

அகப்பொருள் அமைதியில் உலகியலைச் சுவைபடக் காட்டுகின்ற திருக்கோவையார், புறப்பொருள் அமைதியில் இறையியலை முற்ற முடியச் சுட்டிக்காட்டிக்கொண்டிருக்கின்றதென்பதை உண்மையுணர்ந்தவர்கள் அறிந்து பாராட்டுவார்கள். இதனைத் 'திருக்கோவையாருண்மை' என்ற பழய நூலொன்றினால் அறியலாம்.

சிவஞானங் கைவரப்பெற்ற சான்றோர்களது திருவாக்கின் உள்ளுறையைத் தெரிந்துகொள்ளுதற்கு, அத்தகைய சிவஞானிகளால் மட்டுந்தான் முடியும். ஞானிகளது திருவாக்கைச் சிவபெருமானது திருவாக்கே யென்று பெரியோர் கொண்டாடுவர். அநாதி மல முத்தராகிய சதாசிவமூர்த்தியினது திருவாக்காக வெளிவந்தவை வேதசிவாகமங்கள். அவற்றிற்கும் சமயகுரவர்-சந்தான குரவர்கள் அருளிச் செய்த தேவார-திருவாசக மெய்கண்ட நூல்களுக்கும்வேறுபாடு கிடையாது.

வேத சிவாகமங்களில் பொது நூலாகிய வேதத்தைவிடச் சிறப்புநூலாகிய சிவாகமம் சிறந்தது. அச்சிவாகம சாரமே திருமுறைகள். திருக்கோவையார் உணர்த்தும் சிவாகமப் பொருள் நுட்பங்களை நுணித்துணர்ந்து சிவஞானிகள் அநுபவிப்பார்கள். அவ்வாறு அநுபவித்த ஞானியருள் 'திருக்கோவையாருண்மை'யை வழங்கிய ஆசிரியரும் ஒருவர்.

உலகியலின்பங்களுள் தலைவனுந் தலைவியும் ஒன்றியிருந்து நுகரும் இன்பம் தலைசிறந்தது. அதுபோல இறையியலின்பங்களுள் ஆண்டவனும் ஆன்மாவும் ஒன்றியிருந்து நுகரும் இன்பம் உயர்ந்ததாகும். ஆண்டவனது உலகத்திலிருத்தல், ஆண்டவன் அருகிலே யிருத்தல், ஆண்டவனது உருவம் பெற்றிருத்தல், ஆண்டவனோடு ஒன்றியிருத்தல் என இறையியலின்ப[illegible]கள்

வகைப்படும். இவற்றுள் இறுதியாகக் கூறப்பெற்றதே 'அத்துவித முத்தி' என்று சிவாகம முதலிய நூல்களில் சிறப்புறப் பாராட்டப் பெற்றதாகும்.

அத்தகைய பரமுத்தியின் இயல்பு, திருக்கோவையாரில் எவ்வாறு உணர்த்தப் பெறுகின்றதென்பதை அறிந்துகொள்ளுவதே, அந்நூலைக் கற்பதனாற் பெறத்தக்க முடிந்த பயனாகும். அதற்கு வழிகாட்டியாக அமைந்திருப்பது 'திருக்கோவையாருண்மை'

'இயற்கைப் புணர்ச்சி முதல்' 'பரத்தையிற் பிரிவு' வரை இருபத்தைந்து அதிகாரங்களையுடையது திருக்கோவையார். இவ்வதிகாரத்தைக் கிளவிக்கொத்து என்றும் சொல்லுவர். இயற்கைப் புணர்ச்சி பதினெட்டுக்கிளவிகளை யுடையது. முதற் கிளவி 'காட்சி' என்று சொல்லப்பெறுவது.

இயற்கைப் புணர்ச்சியைத், தலைவனுந் தலைவியும் பொழிலிடத் தெதிர்ப்பட்டுத் தெய்வமிடை நிற்பப் பான்மை வழியோடி ஓராவிற் கிருகோடு தோன்றினாற் போலத் தம்முளொத்த அன்பினராய் அவ்விருவரொத்தார் தம்முட்டாமே கூடுங் கூட்டம் எனவும் காட்சியைத் 'தலைவியைத் தலைவன் கண்ணுற்று இஃதொரு வியப் பென்னென்றல்' எனவும் பொருளிலக்கணம் விளக்கும்.

இவற்றை முறையே 'இயற்கைப் புணர்ச்சித் துறையீரொன்பதுஞ் சத்திநி பாத மொத்திடுங் காலத், துத்தம சற்குரு தெரிசன மாகும்' எனவும் 'குருவின் றிருமேனி காண்டல்' எனவும் திருக்கோவையாருண்மை விளக்குகின்றது. இங்கே தலைவி பரம்பொருள், தலைவன் பக்குவான்மா, தோழி திருவருள், தோழன் ஆன்மபோதம், செவிலி திரோதாயி நற்றுப் பரை எனக் கொள்ளுதல் வேண்டும்.

'சிவமூர்த்தியே குருமூர்த்தியாக வருவார்' என்பது சித்தாந்தமாதலின், முதற்காட்சியில் தலைவனாகிய பக்குவான்மாவுக்குத் தலைவியாகிய பரம்பொருள் குருமூர்த்தியாகப் புலப்படுவது தானே முறை. அதனாலேதான் 'காட்சியைக், குருவின் திருமேனி காண்டல்' என்று பெரியோர் கூறினர்.

'அறிவனூற் பொருளும் உலகநூல் வழக்குமென இரு

பொருளும் நுதலித் திருவாதவூர்ச் செழுமறை முனிவரால் எடுத்துக் கொள்ளப்பெற்ற திருக்கோவையாருக்கு ஆகம நூல் வழியில் நுதலிய ஞான யோக நற்பொருளை யுணர்த்துதல் அரிது. உலகநூல் வழியில் நுதலிய பொருளாகிய பாற்கடலில் எனது புலனென்னும் கொள்கலன் முகந்த அளவிற்குச் சிறிது முகந்து உங்களுக்குப் படைக்கிறேன்' என்று இந் நூலுக்கு உரையெழுதிய ஆசிரியர் சொல்லுவாரென்றால், இதன் பொருளாழங் காணுதற்கு எவராலும் இயலாதுஎன்பதுதானே அதனாற் பெறப்படுவதாயிருக்கின்றது?

சிந்திக்கச் சிந்திக்கச் சிறப்புப் பொருள்கள் பலவற்றைப் புதிது புதிதாகவழங்குகின்ற இத்திருப்பாடல், திருக்கோவையாரின் முதற்பாடலாய் அமைந்துள்ளது. இப்பெருநூல் பேசுவது ஐந்திணை யொழுக்கத்தைப் பற்றியே என்பதும், அவ்வொழுக்கங்களுள் அடிப்படையாய் நிற்பது குறிஞ்சித்திணை யொழுக்கமே என்பதும், அறமும் பொருளும் இன்பமுமாகிய உலகியல் உறுதிப்பொருள்களை ஒருவன் அடைந்து வாழ்வது, வீடாகிய இறையியல் உறுதிப்பொருளை அடைந்து இன்புறுதற்கே என்பதும், சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்ற திருத்தலங்கள் அனைத்திலும் சென்று பெறத்தக்க பயனைத், தில்லைப் பதியொன்றிலே சென்று பெறலாமென்பதும் முதலாகிய பல அருட்பொருள்களை இப்பாடல் உடையதாயிருக்கின்றது.

இதில் சொல்லப்பெற்ற பூக்கள் ஐந்து. அவை மருதத்தின் தாமரையும், நெய்தலின் நெய்தலும், முல்லையின் குமிழும், பாலையின் கோங்கும், குறிஞ்சியின் காந்தளுமாம்- ஐந்திணைப் பூக்களையுஞ் சொல்லி நிலமயக்கத்தைப் புலப்படுத்தியவர், இறுதியாகக் குறிஞ்சியை வைத்து அதன் அடிப்படையை உணர்த்தியது நினைவிலிருத்தத் தக்கதாகும்.

தலைவியைத் தலைவன் கண்ட காட்சி இப்பாடலாற் கூறப்பெற்று, இன்பத்தை நுதலியதாக இது அமைந்திருக்கிறதென்றாலும், தம்முள் ஒப்பாருமிக்காருமில்லாத அத் தலைவன் தலைவியரது கூட்டுறவு, அவர்கள் அடையும் அறப்பொருட் பேற்றிற்குக் காரணமாயிருந்து பயன் தருவதாதலின், அறம்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

'திருவள்ளுவரைச் சைவராகவோ வைணவராகவோ நாஸ்திகராகவோ இஸ்லாமாகவோ பொதுவுடைமை வாதியாகவோ பாராமல் திருவள்ளுவரைத் திருவள்ளுவர் கண்கொண்டு பார்க்க வேண்டும்' (12-8-55 தமிழ்நாடு) என்று கட்டளையிட்ட அவர் 'வள்ளுவருக்கு ஒரு சமயநெறி இருந்திருக்க முடியும். அது குறுகிய நெறியல்ல. அதுதமிழ்ப் பண்பாட்டிற்கு உரிய உயர்ந்த நெறி' (5–8-55தமிழ்நாடு) எனக் கூறி வள்ளுவரைத் தமிழ்ச் சமயி யென்ற அளவுக்குக் கொண்டுவந்து 'வள்ளுவரது காலத்தில் நமது நாட்டில் பிரமதஸ்தர்கள் இருந்ததே யில்லை. அவரது காலம் சங்ககாலம். அவரது மொழி தமிழ்மொழி. ஆகவே அவர் காட்டும் சமய நெறியும் சைவநெறியாகத்தானிருக்க வேண்டும்' (2-9-55தமிழ்நாடு) எனக்கூறிச் சைவசமயி யென முடித்தார். 'பிறமதஸ்தர்கள் இருந்ததில்லை. 'சைவ நெறியாகத்தான்' என்றதால் வைணவமு மிருந்ததில்லை யென்றுகிறது. ஆகலின் வைணவமும் தமிழகத்துக்கு வந்தேறி மதந்தான். அதைத் தமிழகத்துக்குக் கண்ணென்பதும், சைவத்துக்குத் துணையென்பதும் அந்நவீனரது சொந்தக் கற்பனையே; உண்மையாயின், சைவத்தை மாத்திரம் ஆசரிப்பவனும், வைணவத்தைமாத்திரம் ஆசரிப்பவனும் ஒற்றைக் கண்ணரே யாவர். 'அமுதருந்தப் பெறுர்... மாயன் மாயத்துப் பட்ட மனத்தரே' என்ற சைவமும், 'சிறியார் சிவப்பட்டார்' என்றவைணவமும்கண் களாதலும் துணையாதலும் யாங்ஙனம்? ஏககாலத்திற் கிழக்கை யொன்றும் மேற்கை யொன்றுமாகப் பார்க்கிற இரண்டு கண்களிருப்பது ஆபத்து. அதைவிட ஒரு கண்ணிருப்பது மேல். அந்நவீனர் இரண்டு தோணியிற் கால்வைக்கிறார், கரைசேர மாட்டார். மேலும் வெளிநாட்டு மதங்கள் வந்தால் அவற்றையும் வாரியணைக்கும் பரந்தமனப்பான்மையுடையது தமிழகமென்பாரவர். அஃதாயின், கிறிஸ்தவ இசுலாமிய மாதியவற்றையுந் தமிழகத்

துக்குப் புதியனவாய்க்கிடைத்த கண்களாக அவர் கொண்டாலென்னை? தமிழகம் இருகணியாவதினும் பலகணியாவது நல்லதுதானே. அத்தனை கண்களும் பரஸ்பரந் துணையாமெனக் கூறலே அவருக்கு நியாயம். சைவத்துக்கு வைணவந் துணையாகுமாயின் கிறிஸ்தவ இசுலாமிய மாதியவுந் துணையாகும். பின்னவை யாகாவெனின் முன்னது மாகாது. அது தமிழகத்ததாயினும் அதனைச் சைவம் அணைத்துக் கொள்ளாது. 'உடன் பிறந்தே கொல்லும் வியாதி' என்றார் ஔவையார்.

வைணவ மாயாவாத சமயங்களாற் சைவம் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்ததைக் கண்டு மனம் பொறுமல் ஊரூராய்ச் சென்று நூற்றுக் கணக்கான பிரசாரங்கள் புரிந்தும், புத்தகங்களியற்றி வெளியிட்டும் நீதி மன்றங்களில் வழக்காடியும் சைவம் புரந்தனர் வைதிக சைவ சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சூளை சோமசுந்தரநாயகர், யாழ்ப்பாணம் ஆறுமுகநாவலர், பாம்பன் சுவாமிகள், சபாபதி நாவலர், திரிசிரபுரம் மீனட்சிசுந்தரம்பிள்ளை, காசிவாசி செந்திநாதையர், வேங்கடரமணதாசர், மாயாவாத தும்ஸகோளரி நா. கதிரைவேற்பிள்ளை முதலிய விற்பன்னர் பலர். பயங்கரமான எதிர்ப்புக்களுக்கிடையே அவர் அப்பணி செய்து ஜயசீலராய் விளங்கினர். அம்மம்ம! அறிஞர் மெச்சத்தக்கது அவரது பௌருஷம். ஆனல் அவர் விட்டுச் சென்ற பணியைத் தொடர்ந்து நடத்த இக்காலைச் சைவசமூகத்தில் நாதியில்லை. என்னே இவ்வளவு குறுகிய காலத்தில் இவ்வளவு பெரியமாறுதல்! இப்போது திருப்பாவை திருவெம்பாவைக் கூட்டு மகாநாடுகள் ஆங்காங்கே நடந்து வருகின்றன. நவீனர் அக்கூட்டுட் சிக்கி அம்மகாநாடுகளால் நாத்திகம் வீழ்ந்தும் ஆத்திகம் வாழ்ந்தும் வருகின்றன வௌப் பேசுகிறார். நாத்திகமும் மாயாவாதமும் அண்ணன் தம்பிகளாகும். சோமசுந்தரநாயகரியற்றிய 'ஆபாசஞான நிரோதம்' என்னும் புத்தகத்தைப் படித்தவர் அவ்வுண்மை தெரிவர். அம்மாயாவாத மதகுரு ஆத்திகத்தைப் பரப்புபவர் போல் தம்மைக் காட்டிச் சைவ சமூகத்தைத் தம் சமயப் படுகுழியில் வீழ்த்துதற்குச் செய்யுஞ் சூழ்ச்சியாகவே அக்கூட்டு மகாநாடுகளை நடத்தக் கட்டளையிட்

(10ம் பக்கம் பார்க்க)

உ
சிவபயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி ஆடி - 4

# பட்டினத்தார் திருநாள்

இந்நாளில் சென்னபட்டினம், பட்டினமென்று வழங்கப் பெறுவதுபோல், முன்னாளில் காவிரிப் பூம்பட்டினம் பட்டினமென்று வழங்கப்பெற்று வந்தது. கடற்கரைத் துறைமுக நகரங்களைப் பட்டினங்களென்றும், அதனைச் சார்ந்துள்ள பேரூர் சிற்றூர்களைப் பாக்கம், பாடிகளென்றும் பண்டைக்காலத்தே வழங்கினார்கள். 'பத்துப்பாட்டுள் ஒன்றாகிய 'பட்டினப்பாலை' காவிரிப்பூம்பட்டினத்தையும், அங்கேயிருந்து அரசு புரிந்த கரிகாற் பெருவளத்தானையும் பற்றிப் பேசுகின்றது.

அந்தமுறையில் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழ்ந்திருந்த திருவெண்காடரென்னும் சிவஞானி, பட்டினத்தாரென்று அழைக்கப் பெறுகின்றார். உலகியற் செல்வங்களுள் உயர்தகுதியுடையனவாகக் கருதப்பெறுகின்ற கல்விச் செல்வமும், பொருட்செல்வமும் ஒருவனுக்கு நிறைந்திருந்த போதிலும், அருட்செல்வ வளம் அவனை அடையாதபொழுது, அவனால் அவனுக்கோ அல்லது மற்ற எவருக்குமோ எந்தச் சிறந்த பயனும் எய்த மாட்டாது.

பொருட் செல்வமும் கல்விச் செல்வமும், உடையவனைச்செருக்காளனுக்கி இருக்குமிடத்திலிருந்து கீழே இறங்கும்படி செய்து

விடும். அருட்செல்வமோ அஃதுடையவனைத் தெய்வ வாழ்வாளனாக ஆக்கி மேலே ஏறும்படி செய்து விடும். இதனை அறிந்து கொள்ளுதற்குப் பட்டினத்தாரது வாழ்க்கை வரலாறு சிறந்த கருவியாய் அமைந்துள்ளது.

அளகாபுரிக் கிறைவனாகிய குபேரனே பட்டினத்தாராக வந்து பிறந்தானென்று வரலாறு கூறுகின்றது. நீர் வாணிபத்திலும் நில வாணிபத்திலுமாக அவர் ஈட்டி வைத்திருந்த செல்வத்திற்கு அளவேயில்லை.

இளம் பருவத்தில் கற்கவேண்டிய நூல்களைக்கற்று, நடைமுறையிற் கொள்ளவேண்டிய நல்லொழுக்கங்களிற் சான்றவராய் அவர் இருந்தபடியினாலேயே, அவருக்குத் தேவையாயிருந்த அருளுணர்ச்சியையூட்டுதற்கு ஆண்டவன் திருவுளங்கொண்டான். இறைவன் உயிர்களுக்கு அருள் புரிகின்ற நிலைகளும், முறைகளும் நாம் அறுதியிட்டுக் காணத்தக்க அமைதியில் இருப்பதில்லை.

'வேறு வேறுருவும் வேறுவேறியற்கையும், நூறு நூறாயிர மியல்பினதாகி, ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக், கூறுடை மங்கையுந் தானும்வந் தருளி' என்பார் மணிவாசகர். பட்டினத்தாரை ஆண்டவன் மகனாக வந்து ஆட்கொண்டான். பொன்னும் பொருளும் போகமுமேசதமெனநினைத்து, அவற்றைப் பெறுதலிலேயே ஆழ்ந்திருந்த பட்டினத்தாருக்கு 'காதற்ற ஊசியும் வாராது காணுங் கடை வழிக்கே' என்ற சொற்றொடர் பெருவாழ்வு நல்கும் திருமந்திரமாகிப் பயன்தந்தது. 'பட்டினத்துப் பிள்ளையைப்போல் யாருந் துறத்தல் அரிது' என்று பிற்காலப் பெரியாரனைவரும் பாராட்டி ஏத்தத்தக்க நிலையில் உலகியலைத் துறந்து உண்மை ஞானியாக அவர் ஆவதற்கு அச்சொற்றொடரே வழிவகுத்துக் கொடுத்ததென்றால், அதன் சிறப்பியல்பை அளவிட்டுச்சொல்ல யாரால் முடியும்?

தமது நல்வினைப் பயத்தால் உய்திபெற்ற நமது முன்னோர்களிற் சிலர், நம்பால்வைத்த கருணையால் தாம்பெற்ற இன்ப அநுபவங்களை நாமும் பெறுதற்பொருட்டு எடுத்து விளக்கியும் சென்றுள்ளார்கள். அவ்வாறு சென்றவர்களில் பட்டினத்தாரும் ஒருவர். இவரது திருவாக்கு சிறந்த தமிழ்ச் செய்யுட்களாகப் பதினோராந் திருமுறையில் இடம் பெற்றும், தனிப்பிரபந்தங்களாக அமைந்தும் விளங்குகின்றது.

இத்தகைய சிவஞானியினது நினைவுநாள் **22-7-56** ஞாயிற்றுக்கிழமையாதலால், அந்நாளில் அவரை நினைந்து வழிபட்டு நல்வாழ்வடைவோமாக.

(7ம் பக்கத் தொடர்ச்சி)

டார். நவீனர் அக்கட்டளையைச் சிரமேற் ருங்கினர்- அம்மகாநாடுகளும் பரவுகின்றன. அதனால் திருமுறைகளின் ஒப்புயர்வின்மையில் நம்பிக்கை கெடுகிறது. 'அரியும் சிவனும் ஒண்ணு, அறியாதவன் வாயில் மண்ணு' என்னும் பித்தவாசகம் பேர் பெறுகிறது. அம்மகாநாடுகளில் அதற்கே முதலிடமுண்டு. சைவ சமூகத்தை மாயாவாதத்திற் புகுத்துவதற்குக் கற்பிக்கப்படும் முதற்பாடம் அதுதான். அம்மகாநாடுகளாற் சைவம் வளர்தலுமுண்டோ?

'அரிசனங்களும்.....தொடர்பு கொள்வர்' (19-7-55 தமிழ்நாடு) என்கிருர் நவீனர். அரிசனமென்பது பாரததேசத்திலுள்ள ஒருசார் மக்களுக்குச் சமீப காலத்திற் கொடுக்கப்பட்டதொரு பெயர். அவர் சுமார் எழெட்டுக் கோடிக்கு மேலும் உளர். அவருள் அரிவணக்கக்காரரு மிருப்பர், அரவணக்கக்காரரு மிருப்பர். ஆயினும் அரவணக்கக்காரரே மிகப் பெரும்பாலரெனத் தெரிகிறது. தமிழகத்திலோ அவரனைவருமே அரவணக்கக்காரர் தானெனத் துணிந்துகூறலாம். அங்ஙனமாகப் புதுப் பெயரிட்டழைக்க ஆசைப்பட்டவர் அவரை அரிசனமென்றோ, அரிசனமென்றோ பெயரிடாமல் ஏதேனுமொரு பொதுப்பெயரிட் டழைத்திருக்கலாம். அதைவிட்டு அரசனமென்றழைத்தாரவர். உண்மையில் அம்மக்கள் அரசனமென்ற பெயருக்கே முற்றிலு முரியவர். ஆனால் அரிசனமென்ற பெயரை அவரும் ஆக்ஷேபிக்கவில்லை. அரவணக்கக்காரராகிய ஏனைச் சைவ மக்களும் ஆக்ஷேபிக்க வில்லை. பாரதத்தை ஆங்கிலேயர் ஆண்டபோது நான் 'சிவநேசன்' பத்திரிகையில் ஆக்ஷேபித்தேன். ஏனைச் சைவரெல்லாம் இன்றுவரை என்னவாயினரோ? தெரியவில்லை. ஒரு சமயத்தின் தெய்வத்துக்குரிய சிறப்புப் பெயரை முன்வைத்து ஒருசார் மக்களுக்குப் பெயரிடுவதாயின் அவர் அச்சமயத்தைச் சார்ந்தவராயிருக்கவேண்டும். இப்போது அரிசனமென்று சொல்லப்படுபவர் வைணவரா? அல்லரா. அங்ஙனமாக, அவர் எதிர்காலத்தில் அச்சமயத்தைச் சார்வதற்கு ஏதுவாகும்படி இப்போது அவருக்கு அப்பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. விளைவை நன்கு யோசித்தே எதிரிகள் அப்பெயரையிட்டனர். நவீனரோ அதையறியாமற் சம்மதித்தனர். மிக முயன்று அந்நிய சமயத்தவருள் ஒவ்வொருவராக அல்லது சிலர்

சிலாகத் தம்மா விழுத்துக் கொள்வதே கிறிஸ்தவமாதி சமயங்களிடங் காணப்படுகிறது. ஆனல் வைணவமோ அரவணக்கக்காராகிய ஒருசார்ப் பல் கோடிச் சைவமக்களுக்குத் தன் தெய்வத்துக்குரிய சிறப்புப் பெபரை முன்வைத்து அரிசன மெனப் பெயரிட்டு அதைச் சர்க்காரும் ஏற்குமாறு செய்துள்ளது. அந்தனைபேரையும் எதிர்காலத்தில்வைணவராக்குதற்குச் சிரமமற்ற அதிசாமர்த்தியமான மதமாற்றமுறையன்றோ அது? அதைக் கண்டு கவலச் சைவ சமூகத்துக்குக் கண்ணும்மனமுமில்லையே. சில நூறு வருடங்கள் போகட்டும். அப் பெயரின் விளைவு வெளிப்படும். நவீனர் அச்சமூகத்துக்கு வரும் அப்போபத்தை மறைத்து அவ் வைணவரோடு கூட்டுவாழ்க்கையும் நடத்திவருகின்றனர். அவர் சைவத்தை வளர்க்கிறவராம். ஐயோ! ஹா ஹா!

'வைதிகச் சைவம் நாட்டில் தலையெடுத்த காரணத்தால், வேதங்களையே அறியாத தமிழர் வாழ்வில் வேதவிதிகள் புகுந்து சென்டன' (14-8-55 தமிழ்நாடு) என்கிருரவர். அதுவும் அவர் பிரலாபம். அப்பர், மெய்கண்டார், சிவஞான முனிவர் முதலியோர் வேதங்களை யறிந்து வேதவிதிப்படியொழுகிய வைதிக சைவத் தமிழர் இவர் ஒருவகையார்- நவீனர் சொல்லுகிறபடி வேதங்களையே யறியாமலும், வேதவிதிகளை யாசரியாமலும் இருந்த அக்காலத்தமிழர் இன்னெரு வகையார். அந்நவீனர் அவருள் எவ் வகையாரை யறிஞரென்பர்? எவ்வகையாரை மடவோரென்பர்? இரண்டாம்வகையினர்தான் மூடராய்க் காட்டுமிராண்டிகளாயிருநதிருப்பாரென நான் சொல்லுகிறேன். ஆனல் வேதங்களின் பிரஸ்தாபந் தொல்காப்பியத்திலேயேயுண்டு.

(தொடரும்)




## தங்கம், வெள்ளி

| மதுரை | ஜூலை 17 |
|---|---|
| பாட்லா | 101 12 0 |
| சவரன் | 67 0 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 65 0 0 |
| வெள்ளி 100தோலா | 176 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 13 0 |

(5ம் பக்கத் தொடர்ச்சி)

பொருள் இன்பமாகிய மூன்றை யுமே இது வலியுறுத்துகிற தென்று காண்பதுதான்பொருத் தமானதாகும். ஈசர்தில்லையென் பது வீடுபேற்றுப் பயனைச் சுட் டிக் கொண்டிருக்கிறது.

'ஆன்மாக்களை யாட் கொள் ளக் கருதுகின்ற பரசிவம் அரு வம், அருவுருவம், உருவம் ஆகிய மூவகைத் திருமேனிக ளில் ஒன்றைக்கொண்டு வெளிப் படும்' என்பதுஞானநூல்முடிபு. தில்லை ஈசர் அருவமாக இரகசி யத்தானத்திலும், அருவுருவமா கத் திருமூலட்டானத்திலும், உருவமாகப் பொன்னம்பலத்தி லும் நின்று அருள் செய்கின்று ராதலின், மற்றைத் திருத்தலங் கள் அனைத்துமாகத் தில்லைத் திருத்தலம் விளங்கிக்கொண்டி ருக்கின்றது. தில்லைக்கு அடை போல ஈசர் என்ற சொல்அமைந் திருப்பதும் சிந்தனைக்குரியதா கும்.

காட்சிக்கு வந்த கங்கையைக் கேசாதிபாத முறையில் முகம், கண், மூக்கு, கொங்கை கையா கிய வற்றை மலர்களென்று பார்த்துக் காலைஅன்னநடையெ னக் கண்டானென்ற நயமும் அறி யத்தக்கதாம்.

## ரயில் கால அறிவிப்பு

| | தேவகோட்டை | காரைக்குடி | |
|---|---|---|---|
| | நம் ரஸ் | வரு | புறப் |
| **மானமதுரைக்கு.** | | | |
| 629 | 5-2 | | 4-55 |
| R C | 6-25 | 6-8 | 6-11 |
| 601 | 8-4! | 8-24 | 8-34 |
| R C | | 9-50 | |
| 657 | 15-7 | 14-35 | 15-0 |
| R C | | 17-10 | |
| 653 | 17-27 | | 17-20 |
| R C | 20-14 | 20-0 | 20-3 |
| 607 | 1-3 | 0-48 | 0-56 |
| **திருச்சிராப்பள்ளிக்கு** | | | |
| 785 | 3-57 | 4-15 | |
| R C | 6-35 | 6-42 | 6-57 |
| 630 | 9-26 | 9-42 | |
| R C | | | 10-10 |
| 658 | 11-59 | 12-9 | 12-17 |
| RC | | | 17-30 |
| 602 | 17-55 | 18-20 | 18-28 |
| RC | 20-24 | 20-31 | 20-46 |
| 608 | 0-38 | 0-54 | 1-4 |
| **மாயூரத்திற்கு** | | | |
| 645 | | 10-55 | —— |
| 625 | | 14-52 | —— |
| 639 | —— | 22-25 | —— |
| 636 | —— | —— | 4-25 |
| 640 | | —— | 11-0 |
| 626 | | | 15-5 |

## சுருக்கக் கூடாது

புதிய கம்பெனிச் சட்டத்தின் 24வது பிரிவின்கீழ் பங்கு மூலதனப் பொறுப்பு வரையறுக்கப்பட்ட தனியார் கம்பெனிகள் ஒன்வொன்றும் அதனதன் பெயரில் 'லிமிடெட்' என்ற வார்த்தைக்கு முன்னால் 'பிரைவேட்' என்ற வார்த்தையும் கூடச் சேர்த்து உபயோகிக்க வேண்டுமென்று விதிக்கப்பட்டிருக்கிறது. அப்பெயர் சம்பந்தப்பட்ட கம்பெனியின் காரியாலயத்துக்கு முன்னால் வெளிப்படையாகத் தெரியும்படி வைத்திருக்கப்படுவதுடன் பிரஸ்தாப ஸ்தலத்தில் பொதுவாக வழங்கப்பட்டு வருகிற மொழியில் அது எழுதப்பட்டிருக்கவும் வேண்டும். கம்பெனியின் கடிதத் தலைப்புகள் வர்த்தகப் பட்டியல்கள் ஆகிய வற்றிலும் அவை தெளிவாகக் குறிப்பிடப்பட வேண்டுமென்றும் சட்டத்தில் 147வது பிரிவில் விதிக்கப்பட்டுள்ளது. இது விஷயமாகச் சில தனியார் கம்பெனிகள் 'Pte", "Pvt" என்பன போன்ற சுருக்கங்களை உபயோகித்து வருவதாகத் தெரியவந்துள்ளது. இத்தகைய சுருக்கப்பெயர்கள் அவ்வளவாகப் பழக்கமானவையல்ல என்றும் அங்கிகாரம பெற்றவையல்லவென்றும் சம்பந்தப்பட்ட கம்பெனிகளின் கவனத்துக்குக் கொண்டுவரப்படுகிறது. எனவே இத்தகைய கம்பெனிகளின் பெயர்களுக்கு முன்னால் 'பிரைவேட்' என்ற வார்த்தை முழுவதும் எழுதப்பட்டிருக்க வேண்டும். (கம்பெனிச்சட்ட நிர்வாக பிராந்திய டைரெக்டர்காரியாலயம்)

---

## எஞ்சீனியரிங் கல்லூரிகள்

சென்னை ஜூலை 16—
சென்னை கிண்டியிலுள்ள எஞ்சீனியரிங் கல்லூரிக்கும், கோயம்புத்தூரிலுள்ள எஞ்சீனியரிங் கல்லூரிக்கும்மனுச்செய்து கொண்டவர்களில் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களின் இறுதிப்பட்டியல் இன்று அறிவிக்கப்பட்டது.

இவ்வாண்டு 1478 பேர்கள் எஞ்சீனியரிங் கல்லூரியில் சேர்வதற்கு மனுச்செய்து கொண்டனர். அதில் 181பேர் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர். மேலும் 19இடங்களுக்குரிய மனுக்கள் விரைவில் தேர்ந்தெடுக்கப்படும்.

---

## நாகர்கோவில்

மணிவாசகப் பெருமானின் குரு பூசைப் பிரார்த்தனைக் கூட்டம் நன்னெறி மன்றத்தின் சார்பில் 8-7-56 மாலை இராமவர்மபுரம் திரு எ சொர்ணம்பிள்ளை இல்லத்தில் சிறப்பாக நடைபெற்றது. திருமுறை ஓதுதல், தியானம், பஜனை, நன்மொழி கேட்டல், மௌனம் அருச்சனை ஆகிய நிகழ்ச்சிகள் வழக்கம் போல் நடந்தேறின. சுசீந்திரம், திருவாவடுதுறையாதீனம் திருஞானசம்பந்தசுவாமிகளும் ஸ்ரீஅரவிந்தர் ஆராய்ச்சிக்குழுத் தலைவர் திரு என் சங்கரஐயர் அவர்களும் மாணிக்கவாசக சுவாமிகளைக்குறித்துவிரிவுரை நிகழ்த்தினர்.

---

## கோழிக்கோடு

### ரேடியோ நிலையம்

புதுடில்லி ஜூலை 13-

இப்பொழுது 580 கிலோசைக்கிள்களில் (517.2 மீட்டர்) ஒலிபரப்பி வருகிற, அகில இந்திய ரேடியோ கோழிக்கோடு நிலையம் 1956 ஜூலை 15ந் தேதி முதல் 680 கிலோசைக்கிள்களில் (441,2 மீட்டர்) ஒலிபரப்பி வருகிறது.

---

## கேள்வி நேரம்

சென்னை ஜூலை 14-

சென்னை ரேடியோ நிலையத்திலிருந்து ஒலி பரப்பப் படுகிற 'கேள்வி - நேரம்' என்னும் நிகழ்ச்சி 1956 ஜூலை 16உ திங்கட்கிழமை (இரவு 7.30 மணி) முதல் மீண்டும் ஆரம்பமாகும். அது சென்னை 'எ' அலை நீளத்தில் ஒலிபரப்பப்படும். ஸ்ரீ எச் சி நார்மிங்டன் கேள்விஆசிரியராக இருப்பார்.

கல்லூரி மாணவர்களுக்காக முன்பு ஏற்படுத்தப்பட்ட இந்நிகழ்ச்சியில் சென்னை நகரிலுள்ள கல்லூரி மாணர்கள் பங்கெடுத்து வந்தார்கள். சென்ற வருடம் வரையில் இந்நிகழ்ச்சி மாதமிருமுறை நிகழ்ச்சியாகத் திங்கட்கிழமை மாலை நேரத்தில் ஆங்கிலத்தில் ஒலிபரப்பப்பட்டு வந்தது. மீதி இரு திங்கட்கிழமைகளில் மாணவர்களுக்கு அக்கரையுள்ள 'இளைஞர் அரங்கு நிகழ்ச்சி ஒலி பரப்பப் பட்டது

இவ்வருஷத்தில் முதல் திங்கட்கிழமை ஆங்கிலத்திலும் அடுத்த திங்கட்கிழமை தமிழிலும் 'கேள்விநேரம்' நடத்தப்படும்; பின்னிரு திங்கட்கிழமைகளில் முறையே ஆங்கிலத்திலும் தமிழிலும் இளைஞர் அரங்கு (யூத்போரம்) நடத்தப்படும்.

---

## உங்களுக்குத் தெரியுமா?

இந்தியாவின் ஏற்றுமதிகளின் மதிப்பு 1954ல் 563கோடி ரூபாயாக இருந்தது, 1955-ல் 604கோடி ரூபாயாக அதிகரித்தது.

இந்தியாவில் 1955ல் சுமார் 19,03,500 ரூபாய் மதிப்புள்ள சர்க்கரை உற்பத்தி யந்திரசாதனங்கள் தயாரிக்கப்பட்டன.

ஆந்திரா, பம்பாய், திரிபுரா, வடகிழக்கு எல்லைப்புல ஏஜன்ஸி ஆகிய ராஜ்யங்களின் ரஸ்தா அபிவிருத்தித் திட்டங்களுக்கு இந்திய சர்க்கார் மொத்தம் 42.63 லட்சம் ரூபாய் அனுமதித்துள்ளனர்.

இந்தியாவில் பொருட்காட்சிச் சாலைகளின் சீரமைப்புக்காகவும் அபிவிருத்திக்காகவும் அடுத்த 5வருஷங்களுக்கு மொத்தம் சுமார் 2.5 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

1955ம் வருஷம் இந்தியாவில் 40.9 லட்சம் ரூபாய் மதிப்புள்ள குளிர்பதன சாதனங்கள் தயாரிக்கப்பட்டன.

1954-55ல் இந்தியாவில் பருத்தி சாகுபடிவிஸ்தீரணம் 183 லட்சம ஏக்கராவாக அதிகரித்தது; அதற்கு முந்திய வருஷத்தில் இந்த அளவு 172 லட்சம் ஏக்கராவாக இருந்தது.

தொழில்துறை அபிவிருத்தியைப் பரவலான அடிப்படையில் வளர்க்கும் நோக்கத்துடன் பல்வேறு ராஜ்யங்களிலும் இதுவரை 13தொழில் பேட்டைகளை ஏற்படுத்துவதற்கு இந்திய சர்க்கார் அனுமதியளித்துள்ளனர்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் சுமார் 2,300 குடும்பக் கட்டுப்பாட்டு நிலையங்கள் அமைக்கப்படும்.

---

### மாணிக்கவாசகர் விழா

இலக்குமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலையில் 11-7-56காலை வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர் திரு ஜி சுவாமிநாதய்யரவர்கள் தலைமையில் கொண்டாடப்பெற்றது. இறைவணக்கத்திற்குப்பின் மாணிக்கவாசகர் சரித்திரத்தைத் தலைவரவர்கள் விரிவாக எடுத்துரைத்து திருவாசகம் ஓதவேண்டியதன் அவசியம் பற்றியும் ஓதுவதால் எற்ப[illegible]பற்றியும் கூறினர்கள். மாணவ மாணவிகள்பாட்டு பேச்சு, கும்மி, கோலாட்டம் நடைபெற்றன. திருவாசகம் 'கோயிற்றிருவகவல்' கூட்டுப் பாராயணத்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

## "சந்தா-நேயர்களுக்கு"

அன்புடையீர்!

நமது இதழின் உறுப்பினர்களில் சந்தாப் பாக்கி உள்ளவர்களுக்கு 2-7-56ல் கார்டுகள் எழுதியிருக்கிறோம். ஒருசில அன்பர்கள் நீண்ட நாளான பாக்கியையும் உடையவர்களாயிருக்கிறார்கள். அன்பர்களின் ஆதரவே பத்திரிகையின் நல்வாழ்விற்குத் துணைசெய்வதென்பதைத் தெரிவித்துப் பாக்கிதாரர்களனைவரும் பாக்கிகளை உடனே அனுப்பியுதவும்படி வேண்டுகிறோம்.

அன்புள்ள,
அமைச்சர்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-41
துன்முகி-ஆடி-11
26-7-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## பாலை

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதியதறிந்து வருந்திய தலைவியை, ஆற்றும்படி அவன் கூறியது.

நீயே, பாடல் சான்ற பழிதபு சீறடிப், பல்குறப் பெருநலத் தமர்த்த கண்ணை, காடே, நிழல்கவி னிழந்த வழல்கவர் மரத்த, புலம்புவீற் றிருந்து நலஞ்சிதைந் தனவே, யிங்நிலை தவிர்ந்தனஞ் செலவே வைந்நுதிக், களவுடன் சமழப் பிடவுத்தளை யவிழக், கார்செயல் செய்த காமர் காலை மடப்பிணை தழீஇய மாவெருத் திரலை, காழ்கோள் வேலத் தாழ்சினை பயந்த, கண்கவர் வரிநிழல் வதியுந், தண்படு கானமுந் தவிர்ந்தனஞ் செலவே 256

:-பாலைபாடிய பெருங்கடுங்கோ

நீ புலவர்களின் பாடல்களைப் பெற்ற குற்றமில்லாத அழகிய சிறிய அடிகளுடன், அகன்ற பெருநலத்தையுடைய அமர்த்த கண்களையுடையாய். காடு, தீப்பற்றிய மரங்களையுடைமையால் நிழலும் அழகும் இழந்தது. அதனால் தனிமையைப் பெற்றிருந்து நலம் சிதையப் பெற்றுவிட்டது. இதனால் செலவைத் தவிர்ந்துவிட்டோம். கூரிய நுனியையுடைய களவுப் பூக்களுடன் மணம்கமழும்படி பிடாப்பூக்கள் கட்டவிழ்ந்து மலர மேகம் மழைப் பெயலைச் செய்யத்தொடங்கிய கார்ப்பருவத்தில் இளமையான பிணைமானைத் தழுவிய கரிய பிடரியையுடைய கலைமான் வயிரமுற்றிய வேலமரத்தினது தாழ்ந்த கிளையினாற் பல்கிய கண்ணைக் கவரும் வரி பொருந்திய நிழலிலே தங்கியிருக்கின்ற குளிர்ச்சியுள்ள காட்டிற் செல்லுதலையும் தவிர்த்தோம்.

:-பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

போதும் பெறாவிடிற் பச்சிலை யுண்டு புனலுண்டெங்கும்
ஏதும் பெறாவிடி னெஞ்சுண்டன் றேயிணை யாகச் செப்பும்
சூதும் பெறாமுலை பங்கர்தென் றோணி புரேசர்வண்டின்
தாதும் பெறாத வடித்தா மரைசென்று சார்வதற்கே

:திருக்கழுமல மும்மணிக்கோவை 12

உரை: 'இணையாகச் செப்பும்-இரண்டாகச் சொல்லப் பெறுகின்ற, சூதும்-சூதாடு கருவியையும், பெறா - ஒப்புமையாகப் பெறாது வென்றி கொண்டிருக்கின்ற, முலை-கொங்கைகளையுடைய உமாதேவியாரது, பங்கர்-ஒரு பாகத்தையுடையவராகிய, தோணிபுர ஈசர்-திருத்தோணிபுரத்திலே எழுந்தருளி யிருக்கின்ற இறைவரது, வண்டின்-வண்டுகளுக்கு உரிய தாயிருக்கின்ற, தாதும் பெறாத-மகரந்தப் பொடியைப் பெற்றிராத, அடித்தாமரை-திருவடித்தாமரைகளை, சென்று சார்வதற்கு-அடைந்து சார்ந்திருப்பதற்கு, போதும் பெறாவிடில் - பூக்கள் கிடைக்காவிட்டால், எங்கும்-எல்லா இடங்களிலும், பச்சிலை உண்டு-பச்சிலை இருக்கிறது, புனல்உண்டு-தண்ணீர் இருக்கிறது, ஏதும் பெறாவிடில்-அவ்விரண்டில் எதையேனும் பெறாவிட்டாலும், நெஞ்சு உண்டு-நினைப்பதற்குரிய மனம் எல்லாரிடத்திலும் இருக்கின்றது, அன்றே-அல்லவா' என்பதாகும்.

பதினோராந் திருமுறையிலுள்ள பட்டினத்துப் பிள்ளையார் பிரபந்தங்களுள், திருக்கழுமல மும்மணிக் கோவையும் ஒன்று. மும்மணிக்கோவையென்பது தமிழ்ப்பிரபந்த வகைகள் தொண்ணூற்றாறில் ஒன்றாகும். ஆசிரியப்பா, கட்டளைக் கலித்துறை, வெண்பா, என்ற மூன்றும் ஒன்றன்பின் ஒன்றாய்ப் பப்பத்து அமைய, முப்பதுபாடல்

களை அந்தாதித் தொடை பொருந்த இயற்றுவது இப்பிரபந்தத்தின் இலக்கணமாகும்.

திருக்கழுமல மும்மணிக் கோவையில் பன்னிரண்டுபாடல்கள் மட்டுந்தான் இப்பொழுது கிடைத்துள்ளன. திருவளர் என்று தொடங்கும் முதற்பாடலின் அந்தம், இரண்டாவது பாடலுக்கு ஆதியாய் அமைந்துள்ளது. இரண்டாவது பாடலின் அந்தம் மூன்றாவது பாடலுக்கு ஆதியாய் அமையவில்லை. மூன்று முதல் பத்துவரையுள்ள பாடல்கள் அந்தாதித் தொடையில் அமைந்துள்ளன. பத்தாவது பாடலின் அந்தம் பதினொராவது பாடலுக்கு ஆதியாய் அமையவில்லை. பதினொராம் பாடலின் அந்தம் பன்னிரண்டாம் பாடலுக்கு ஆதியாய் அமைந்திருப்பதோடு, அப்பாடலின் அந்தம் முதற்பாடலுக்கு ஆதியாய் அமைந்து மண்டலிக்கவில்லை. எனவே இரண்டு-மூன்றாவது பாடல்களுக்கிடையிலும், பத்து - பதினொராவது பாடல்களுக்கிடையிலும் கடைசியிலுமாக மூன்றிடங்களில் பாடல்கள் மறைந்து விட்டன என்று கருதுவதற்கு இடமுண்டு. ஆனால் இப்பொழுது கிடைத்துள்ள பன்னிரண்டு பாடல்களும் வைப்பு முறையில் ஆசிரியப்பா, வெண்பா, கலித்துறை என்ற வரிசையில் சரியாக இருக்கின்றன. எனவே மறைந்து விட்டவை, ஒவ்வொரு பாவகையிலும் ஆறு ஆறாகப் பதினெட்டென்பது அறியக் கிடக்கின்றது.

கோயில் நான்மணி மாலை, திருக்கழுமல மும்மணிக் கோவை, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, திருவேகம்பமுடையார் திருவந்தாதி, திருவொற்றியூர் ஒருபா ஒருபது என்னும் ஐந்து பிரபந்தங்கள் பதினொராந் திருமுறையில் பட்டினத்துப் பிள்ளையார் அருளியனவாக உள்ளன. இவற்றுள் பாடற் குறையையுடையது, திருக்கழுமல மும்மணிக்கோவையொன்றே.

ஞானநூற் கருத்துக்களைச் சொற்பொருட்சுவை மலிந்த பாடல்களில் வைத்து எளிமையாக உணர்த்துகின்ற பெருமை பட்டினத்துப் பிள்ளையாருக்கு உண்டு. தமக்கு முன்னே தோன்றிய அருளாசிரியர்களின் திருவாக்குகளை ஊன்றிப் படித்து, அவற்றிலுள்ள பொருள் நுட்பங்களை நன்குணர்ந்து, தமது பாடல்களில் அவற்றை இவ்வாறு

யர் வெளிப்படுத்தியிருப்பது, ஆராய்ச்சியில் தலைப்படுபவர்களுக்குப் பெரிதும் உதவி செய்வதாயிருக்கின்றது.

ஆளுடைய பிள்ளையாரது முதற்றிருமுறையிலுள்ள முதற் பாசுரத்தின் ஈற்றடியிலுள்ள 'பீடுடைய' என்ற அடைமொழியை அதனையடுத்துள்ள பிரமாபுரத்திற் கேற்றுவதா? அதில் மேவிய 'பெம்மானுக் கேற்றுவதா? என்பதில் புலவர்கள் மாறுபடுவதுண்டு. இவ்வாசிரியர் இந்நூலின் முதற்பாடலில் 'தோடுடைய செவியனென்றும், பீடுடைய பெம்மானென்றும், கையிற் சுட்டிக் காட்ட, ஐயநீ வெளிப்பட்டருளினையாங்கே' என்று அருளுவதை அறிந்தால் ஆளுடைய பிள்ளையாரது திருவுள்ளத்தைத் தெரிந்து, அவருடைய திருவாக்கின் பொருளை உணர்ந்து கொள்ளுதற்கு வாய்ப்பாயிருக்கும்.

இவ்வாறு ஞானநூற் கருத்துக்களை அந்த ஞானசிரியர்களின் திருவாக்குகளுக்கு உண்மைப் பொருள்களை உணர்த்தும் முகமாகப் பல இடங்களில் இவ்வாசிரியர் தெளிவுபடுத்தியுள்ளார். மேலும் பல இடங்களில் சைவஒழுக்கம் இவரால் வலியுறுத்திப் பேசப்பெற்றுள்ளது. சைவ ஒழுக்கங்களில் தலைசிறந்ததாக விளங்குவது, அடியாரோடு கூடிச் சிவவேடத்தையும் திருக்கோயிலையும் சிவனெனவே வழிபடுதலாகும். வழிபடுதலாகும். வழிபாட்டின் அடிப்படையில் சிவபூசை நின்று, பயனை அளிக்கும். அச்சிவபூசை, ஆன்மார்த்தமென்றும் பரார்த்தமென்றும் இருவகைப்படும். சரியைத் தொண்டு செய்பவர்க்குப் பரார்த்த பூசைகளில் வழிபடும்வழிபாடு பயன் தரும். கிரியைத்தொண்டு செய்பவர்க்குப் பரார்த்த ஆன்மார்த்த பூசைகளில் வழிபடும் வழிபாடு பயன்தரும்- இவ்விருவகைப் பூசைகளுக்கும்இன்றியமையாது வேண்டப்பெறும் புறப்பொருள்களுள் பூவும், நீரும் முன்னணியிலிருப்பன. அதனாலேயே 'புண்ணியஞ்செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு, அண்ணலது கண்டருள் புரியா நிற்கும்' என்று பத்தாந் திருமுறை கூறியது.

திருக்கோவிலை அலகிடுதலும் மெழுகுதலும், பூமாலை தொடுத்தலும், சிவபெருமானைப் புகழ்ந்து பாடுதலும், தீபமிடுதலும், நந்தனவனம் வைத்தலும் அடியாருக்குப் பணிவிடை புரி

லும் சரியைநெறியாளரின் தொண்டுகளென்று சிவஞான சித்தியார் முதலிய நூல்கள்கூறு கின்றன. பார்த்தாலயத்தில் செய்யத்தக்க இப்பணிவிடைக ளுக்குப் பூவும் நீரும் இன்றி யமையாதன வென்பது உணரத் தக்கதாம்.

இனி ஆன்மார்த்த பூசை அகப்பூசை, புறப்பூசை என இருவகைப்படும் கிரியைநெறி யாளர்களாகிய சிவபூசகர்களுக் குப் புதியவிரைப்போது, புகை, ஒளி, மஞ்சனம் முதலியன இன் றியமையாத பொருள்களாம். அகத்திற் செய்வதாகிய அந்தரி யாக பூசையில் கொல்லாமை பொறியடக்கம், பொறுமை, இரக்கம், அறிவு, உண்மை, தவம், அன்பு என்னும்ஒழுக்கங் களாகிய எண்வகை மலர்களும் நிறை, நேயம் என்னும் இரு வகை நீரும் பயன்படும். புறப் பூசையில் பூமாத்தின் கிழுதிர்ந்த போதுகளும், ஆறு, குளம் முத லியவற்றின் நீரும் பயன்படுவன வாம். ஆகவே, பார்த்தம் ஆன் மார்த்தம் ஆகிய இருவகை வழி பாட்டினும் வேண்டப் பெறு கின்ற பொருள்கள் பூவும், நீரும் என்பது நன்கு தெளியப்பெறும். இதனை 'குடங்கை நீரும் பச்சி லையும் இடுவார்க் கிமையாக் குஞ் சாமும், படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி' என்றபரஞ்சோதி யார் திருவாக்கினுலும் அறிய லாம்.

முத்திப்பேற்றை அருளவல்லவ ஞகிய 'ஆண்டவனை ஆசிரியர் இங்கே மூன்று நிலைகளில் நமக்கு நினைவூட்டுகிருர். ஒன்று; அவன் மங்கைபங்கனுயிருப்பது. மற்ருென்று; தோணி புரேச னுய் விளங்குவது. இன்னுென்று: தாதும் பெருகு அடித்தாமரை உடையவனுய்த் திகழ்வது. இம் மூன்றனுள் மங்கை பங்கனுயி ருக்கின்ற அவனது முதற் றன்மை, முத்திப்பேற்றை விரும் புகின்ற உயிர்களுக்கு அருள் புரிவதற்காகவே அமைந்ததா கும்.

'அருளது சத்தியாகு மரன் தனைக் கருணையின்றித், தெருள் சிவ மில்லையந்தச் சிவமின்றிச் சத்தியில்லை' என்ற சித்தியா ரும் 'தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடியத் தாயை மறந் தேயுமதே கிட்டை' என்ற தாயுமான அடிகள் திருவாக்கும் இங்கே நினைவுகூரத் தக்கன வாம். ஆதியும் அந்தமும் இல் லாத அரும்பெருஞ் சோதியாய்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

ஆகலின் அக்காலைத் தமிழரும் வேதங்களை யறிந்து அவற்றின் வழி யொழுகிய வைதிக சைவரே யென்க. இக்காலை நவீனர் போன்று அக்காலத்திலும் அச்சைவரல்லாத் தமிழர்சிலரிருந்திருக்கலாம். அவ்வளவே. நவீனர் சிவாகமங்களையுந் தூற்றுவர். அவற்றைச் சைவசமூகம் அறவே மறப்பதென்றோவென அவர் ஏங்கி ஊசிமேல் நின்று தவங்கிடக்கிறார். இனித் திருமுறை, சித்தாந்தசாத்திரம், திராவிட மாபாடியங்களிலாவது அவருக்குநல்லெண்ணமுண்டா? திருக்குறள் உயர்ந்த நூல்தான். அதைத் திருமுறையாதியனவும் போற்றியுள்ளன. ஆயினும் அது திருமுறைச்கூட்டத்துட் சேர்க்கப்படவில்லை. அதற்குக் காரணங்கள் பல. அறம் பொருள் காமம் என்னும் உலக நடையை விரித்தோதி வீட்டைச் சூசகமாய்க்கூறிச்சென்றது அந்நூல். ஆகலின் அது சமயநூல்வரிசையில் இடம்பெற்றிலது என்பதொன்று. நவீனர் அதைப் பலபடப் பேசிவருவதன் நோக்கமே சைவப் பிரமாண நூல்களாகிய திருமுறையாதியவற்றோடு சைவ சமூகத்துக்கு இருந்துவந்த தொடர்பு அறுந்துபோக வேண்டுமென்பதே. அவர் திருவாசகத்தையும் புகழ்ந்துரைப்பர். அதுவும் மற்ற திருமுறைகளை அச்சமூகம் மறக்கவேயாம், சித்தாந்த சாத்திர திராவிடமா பாடியங்களை அவர் நினைக்கவுஞ் செய்யார். தம்மைச் சைவரெனக் கூறிக்கொள்ளுகிறஅவரதுவாய், முன்காட்டிய 'தமிழர்களும் பிறமதத்தினரும் இசுலாம் மார்க்கத்தை நன்கு கற்றல் வேண்டும்' என்பதும், 'கண்ணன் வாழ்க்கையில் எழுந்த புனித நூல் பகவத்கீதை. உண்மையான அன்பு நூலிது. எல்லோரும் இந்நூலைப் படிக்கவேண்டும். கீதை பாராயணம் அதைச் சொல்லிக்கொடுத்தல் அதன் கருத்துக்களைப் பரப்புதல் ஆகியவற்றைச் செய்ய முற்பட வேண்டும்... கீதையின் மூலம் எவ்வளவு உண்மைகளைக் கண்ணன் அள்ளித் தந்திருக்கிறானென்று பாருங்கள். கீதை சாந்தியை அளிக்கிறது. உலகாயத

மயக்கத்திலிருந்து கீதைதெளிவு படுத்துகிறது. ஆகையால் கண்ணன் நாமத்தைப் பலகாலம் வாயால்வாழ்த்திக் கையால் சேவை செய்ய வேண்டும்' (12-9-55 தினமணி) என்பதும் போன்ற விளம்பரங்களையே சைவ சமூகத்தின்முன் பறையடித்துக்கொண்டிருக்கும். அன்னியசமயங்களையும், அந்நியசமய நூல்களையும், புத்தர்பெருமான், ஏசுபெருமான், நபி பெருமான் என்றெல்லாம் புகழ்ந்து அன்னிய சமயத்தலைவர்களையும் சைவ சமூகத்துக்கு அறிமுகப்படுத்தப் பயின்றதேயன்றிச் சைவ சமயத்தையும், அதைச்சார்ந்த அன்ன பிறவற்றையும் பிறசமயிகளுக்கு அறிமுகப்படுத்தப் பயின்றிலதே அந்தவாய். அங்ஙனம் நவீனர் சைவ சமூகத்தை அந்நிய சமயிகளுக்குக் காட்டிக்கொடுத்து அடிமைப்படுத்த முயன்று அவரிடமிருந்து கமிஷனடிக்கிற கமிஷன் ஏஜெண்டுகளாயிருந்துவருகின்றனர்வேதாகமமாதியவற்றை நிந்திப்பதால் அவருக்குக்கிடைக்கும் பிரயோசனம் அது. 'இந்துக்களின்எண்ணிக்கைநாளுக்குநாள் குறைகிறது. அதே நேரத்திலே கிறித்துமதம் வளர்ந்து கொண்டே வருகிறது' (2-6-55 தமிழ்நாடு) என்கிறுரவர். ஏன் வளர்ந்து கொண்டே வராது? சைவசமய சாஸ்திர வேலியைமேற்காட்டியபடிஅவர் தகர்த்துவருவதே அதற்குக்காரணம். அங்ஙனம் சைவப்பயிரைப் பிறவுயிர்கள மேயவிடுவதுதான் அவர்க்குச் சைவவளர்ச்சிக்கைங்கரியம்.

'செவிடு, ஊமை, அங்கஹீனர்பற்றி அவர்களது பூர்வ ஜன்ம வினையால் பெற்ற பிறவியென மதவாதிகள் மழுப்பிக் கூறினாலும்....' (7-5-54 தினமணி) என்கிறுர் நவீனர். மதவாதிகள் மழுப்பிக் கூறினாலும் என்பதைப் பிறகு பார்க்கலாம். செவிடுமுதலிய கேடுகள் பூர்வ வினைப்பயனென்பது மெய்யா? பொய்யா? 'முன்னைச்செய்வினை யிம்மையில் வந்து மூடும்', 'முந்திச் செய்வினை யிம்மைக்கண் நலிய' என்றது திருமுறை. 'உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பின் செல்லாத்தீ வாழ்க்கை யவர்' என்றது திருக்குறள். ஆகலின் அதைப் பொய்யென்றல் அசைவப் புத்தியே. மதவாதிகள் மழுப்பிக் கூறினாலும் என அவர் கூறியது கருமமலம் உண்டெனக் கொண்ட சமயவாதிகளைப் பரிகசித்தபடியாம்.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு


# செட்டிநாடு

துன்முகி ஆடி - 11


## புகழுடம்பு பெற்ற புலவரேறு

'துன்பம் வருங்கால் தொடர்ந்து வரு'மென்று சொல்லுவார்கள். தமிழ் நாட்டிலிருந்த தக்கார் மூவரை, ஒருவர் பின் ஒருவராக நம்மிடமிருந்து பிரித்து வைத்து விட்ட தீவினை, நமக்குத்தொடர்ந்த துன்பத்தைத் தந்திருக்கிறது.

தனவணிக நாட்டில் சீர்திருத்தச் செல்வராக விளங்கிக் கம்ப ராமாயணம் போன்ற தமிழிலக்கியங்களில் பெரிதும் ஈடுபட்டு வாழ் நாள் முழுவதையும் பொதுநலத் தொண்டிற்கே ஆக்கித் திகழ்ந்த சோ முருகப்பனுர் எதிர்பாராதவிதமாக இவ்வுலக வாழ்வை நீத்தார்கள்.

அவரது பிரிவால் வந்த துன்பத்திலிருந்து ஆறுதல் அடைவதற்குள்ளாகச் சிறந்த சைவவொழுக்கம் உடையவரும், மகா வித்துவான் பிள்ளையவர்களை நினைவு கூருவதற்குக் காரணமாய் அவர்கள் பரம்பரையில் தலை சான்ற மாணவர் திலகமாய் விளங்கியவர்களுமாகிய குடந்தை சைவ சித்தாந்தக் காவலர் குமரசாமிச் செட்டியாரவர்கள் சிவபெருமானது திருவடி நீழலை அடைந்தார்கள்.

அதை அடுத்துத் தற்போதுள்ள தமிழ்ப்புலவரனைவருக்கும் தகை

சான்ற தலைமைப் புலவராக விளங்கிய புலவரேறு, ஆசிரியர் வரத நஞ்சைய பிள்ளையவர்கள்நம்மைப் பிரிந்து பேரின்ப வாழ்வு பெற்றார்கள்.

சீர்திருத்தச் செம்மலே—சைவசித்தாந்தக் காவலரை-தமிழ்ப்பெரும் புலவரேற்றைஒருவர்பின் ஒருவராக இழந்த தவக்குறை நம்பாலதாகி விட்டது. மூன்று துறைகளில் தமக்கு ஒப்பாருமிக்காருமில்லாது பணியாற்றிய மூன்று பெருமக்களைத் தொடர்ந்து ஆண்டவன் அழைத்துக் கொண்டது ஏனோ?

ஆசிரியர் ' வரதநஞ்சைய பிள்ளையவர்களின் அறிவாற்றல்திறத்தை அளந்துசொல்ல முடியாது. யாரிடமும் இனிமையாகப் பழகும் அவர்களது பண்பு அவர்களுக்கே அமைந்திருந்ததோரு தனிச் சிறப்பைப்புலப்படுத்துவதாகும். பண்டைத் தமிழிலக்கியங்களிற் புதைந்துகிடக்கும்நுண்பொருள்களையெடுத்துக், கேட்பவர் அனைவரும் அறிந்துகொள்ளும்படி, எளிமையாகச் சொல்லும் இவர்களது வன்மையைப் பிறரேவர்பாலும் காண முடியாது.

மேடைகளில் நகைச்சுவை படப்பேசிப் பொதுமக்களைத் தம்பால் ஈர்க்கும் பேராற்றல், இவர்களுக்கு இயல்பாகவே அமைந்திருந்தது. மாபெருந் தமிழ்ப்புலவராயிருந்த இவர்கள், சோதிடக்கலையிலும் நல்ல பயிற்சி பெற்றிருந்தார்கள்.

பூதவுடம்பு நீத்துப் புகழுடம்பு பெற்றுவிட்ட இவர்களை இனி நாம், இவர்களியற்றித் தந்துள்ள 'தமிழரசி குறவஞ்சி'யில் தான் காண வேண்டியவர்களாயிருக்கிறோம். சொல்நயமும்பொருளாழமும் மிக்க செந்தமிழ்ச் செய்யுட்களால் இக்குறவஞ்சியை இவர்கள் இயற்றிவைத்து என்றும் தமிழ் நாட்டில் வாழ்ந்து கொண்டுதானிருக்கிறார்களென்று நாம் ஆறுதல் அடைவோமாக.

---




திருக்கடிக்குளத் திருப்பதிகம்:- தருமபுர ஆதீன வெளியீடு. எண் 369. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் 14-7-56 மாத ஜென்ம நட்சத்திர நாளில்வெளியிடப்பெற்றது. வழக்கம்போல் ஆதீனத் தேவாரப் பாடசாலை ஆசிரியர் ஆர் வேலாயுத ஓதுவாமூர்த்திகள் தலச்சிறப்பு, குறிப்புரை முதலியன எழுதியுள்ளார்கள்.

## ஸ்ரீகாசிமடத்தின் கட்டளைகள்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தின் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் கீழ்க்கண்ட கட்டளைகளுக்காக 1366ம் பசலிக்கு மொத்தம் ரூபாய் 4772-5-0 சம்புர்தப்பட்ட தர்மகர்த்தாக்களுக்கு முந்தியவருடங்களைப்போல் இவ்வருடத்திற்கும் 20-6-56ல் அனுப்பப் பெற்றுள்ளது.

## கட்டளைகள் விபரம்

1. சுவாமிமலை சுவாமிநாதசுவாமி கோயில் காலசந்திக் கட்டளை ரூ730, 2. கொட்டையூர் கோடீஸ்வரசுவாமி கோயில் உச்சிக்காலத் தயிர்ச்சாதக் கட்டளை ரூ365, 3. கும்பகோணம் கௌதமேஸ்வரசுவாமி கோயில் காலசந்திக் கட்டளை ரூ172, 4. சிதம்பரம் கோவிந்தராஜசுவாமி கோயில் உச்சிக்காலக் கட்டளை ரூ207, 5. திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சுவாமி கோயில் ததி ஆராதனைக் கட்டளை ரூ178-5-0, 6. திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமி கோயில் காலசந்திக் கட்டளை ரூ465, 7. மதுரை மீனாக்ஷிசுந்தரேசுவரர் கோயில் நித்தியக் கட்டளை ரூ465, 8. திரைலோக்கி சுந்தரேஸ்வரசுவாமி கோயில்நித்தியக்கட்டளைரூ365, 9. திருவாப்பாடி பாலுகந்த நாதஸ்வாமி கோயில் நித்தியக் கட்டளை ரூ365, 10. ஸ்ரீரங்கம் ரெங்கநாதசுவாமி கோயில் துவாதசிக் கட்டளை ரூ210, 11. ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீலஸ்ரீ ஆதிகுமாரகுருபா சுவாமிகள் நித்திய மாகேஸ்வரபூசை ரூ500, 12. ஸ்ரீவைகுண்டம் தேவாரப்பாடசாலை ரூ750.

## புலவரேறு

## சிவபாதமடைந்தார்கள்

சேலம், ஜூலை 12-

புலவரேறு ஆசிரியர் திரு. அ வரதநஞ்சையபிள்ளை இன்று பிற்பகல் 1-30மணிக்குச் சேலம் மாவட்டத்தைச்சேர்ந்த தோரமங்கலத்தில் உள்ள தமது இல்லத்தில் காலமானார்கள்.

ஆசிரியர் வரதநஞ்சையபிள்ளை பரந்த புலமையும், சிறந்த நாவன்மையும், கவிகளில் புதைந்து கிடக்கும் அரிய கருத்துக்களை அகழ்ந்தெடுத்து எளிதாக இனிமைப்படுத்தி உரைக்கும் ஆற்றலும் கொண்டவர்.

இவர் கிராமக் கணக்கராக இருந்துகொண்டே தமிழ்மொழியில் புலமைபெற்றவர். தம்முடைய 9வது வயதிலேயே நன்னூல் முதலியவற்றைச் சிறப்பாகப் பயின்றவர். இவர் கணிதத்திலும், சோதிடக்கலையிலும் நல்ல தேர்ச்சி பெற்றிருந்தார். இவர் பாடியுள்ள 'தமிழரசி குறவஞ்சி' புலவர் பாராட்டும் புகழ் பெற்றது.

## காலமானார்

சென்னை ஜூலை 23-

சென்னையின் முன்னாள் மேயரும் ஷெரீபுமான திரு, எஸ். இராமசாமிநாயுடு இன்று அதிகாலை 3மணிக்குக்காலமானார்.

இவருக்கு வயது50. இவருடைய சவஊர்வலமும், இறுதிச் சடங்குகளும் இன்று மாலை 5 மணிக்கு நடைபெற்றது. இவர் சிறிது நாட்களாக இருதய நோயினால் பாதிக்கப்பட்டுச் சிகிச்சை பெற்றுவந்தார். இவருக்குஒருமகனும் இரண்டுபெண் மக்களும் உள்ளனர்.

காலஞ்சென்ற திரு, நாயுடு சிறந்த சொற்பொழிவாளர். அவருடைய மரணம் சென்னைமாகாணத்துக்கு ஈடுகட்ட முடியாத நட்டமாகும்.

## தங்கம், வெள்ளி

| மதுரை | ஜூலை 23 | | |
|---|---|---|---|
| பாட்லா | 102 | 6 | 0 |
| சவரன் | 67 | 10 | 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 65 | 8 | 0 |
| வெள்ளி 100தோலா | 176 | 0 | 0 |
| வெள்ளி 1தோலா | 1 | 13 | 0 |

(5ம் பக்கத் தொடர்ச்சி)

ஊழிக்காலத்திலும் இருந்து உயிர்களுக்கு அவன் இன்பம் வழங்குகின்றவனென்பதைத் 'தோணிபுரோர்' என்பதாற் குறித்தார். நாதும் பெறுத அடித்தாமரை. தேவர்களுக்கும் தேவனாக அவன் விளங்குகின்றானென்பதையும், அவனது முத்தித்திரு உயிர்கள் தாமாகச் சென்றடைய முடியாத சிறப்புடையதென்பதையும் உணர்த்துகின்றது.

பெறுதற்கரிய பெருமையுடையதாகிய சிவபெருமானது திருவடிப்பேற்றைச் சிறுமுயற்சி செய்தே பெற்றுவிடலாமென்ற ஞானநூற்பொருளை இங்கேஆசிரியர் மிக எளிய முறையில் எடுத்து நமக்கு அறிவிக்கிறார். பூ அகப்படாவிட்டால் பச்சிலைகள் எல்லா இடங்களிலும்அகப்படுமே? தண்ணீர் இல்லாத இடம் உண்டா? என்று கேட்டுவிட்டு, அவைகளும் கிடைக்காவிட்டால் உங்கள் நெஞ்சம் உங்களைவிட்டு ஒருநாளும் பிரிவதில்லையே? என்று அடுத்த வினவை எழுப்பி ஆக்கையின் பயனையும் நெஞ்சின் கடமையையும் சினை ஆட்டுகிறார்.

'மனம், மொழி, மெய் ஆகிய மூன்று கரணங்களில் முன்னதும் பின்னதுமாகிய இரண்டின் கடமைகள் இங்கே வெளிப்படையாக அறிவுறுத்தப் பெற்று, இடைப்பட்டதாகிய மொழி இறைவனுக்கேயாதல் வேண்டுமென்ற அதன் கடமையும் குறிப்பாலுணர்த்தப்பெற்றதென்பது அறியத்தக்கதாகும்.

---

## நோட்டீஸ்

பரமக்குடி டி. மு கோர்ட்டு

O.S 156 of 1949
E. P: 86 of 1956

நா. சு. நாராயண ஆசாரி—வாதி

வி. சுந்தர முதலியார்-9,
ச. சிவப்பிரகாச முதலியார்-10

:—பிரதிவாதிகள்

அடமானச்சொத்துக்களை ஏலத்திற்குக்கொண்டுவரும் ஷெ மனுவுக்கு 10-8-56 உ வாயிதா

A. ஸ்ரீநிவாஸய்யங்கார்

அட்வகேட்

பரமக்குடி
14-7-56

# அனாதை

சி. கே. மாறன்

இரவு மணி பத்து. நிலாக் காலமாதலால் வீதி விளக்குகள் அணைக்கப்பட்டிருந்தன. அந்த மயான அமைதியைக் கிழித்துக் கொண்டு ஒரு சொறிநாய் பசி தாங்காமல் ஓலமிட்டது.

அந்த வீதியில் ஒரு மாடிக் கட்டிடம் இருந்தது. அதுதான் வெளியூர்ப் பிரயாணிகள் தங்கும்ரெஸ்ட் ஹவுஸ். அதில்வெளியூர்ப் பிரயாணிகள்தான் தங்கலாம் என்ற நியதி கிடையாது.

காசு கொடுப்பவர்கள் யாராக இருந்தாலும் தங்கலாம். இருட்டியபிறகு வந்து, விடிவதற்குள் செல்லும் இளம் பெண்களின் நகைப்பையும் - வேதனைகள் நிறைந்த கொச்சை வார்த்தைகளையும்கூட அந்த ஹவுஸில் இரவில் கேட்கலாம்.

அந்தக் கட்டிடத்திற்கு அடுத்தாற்போல் ஒருபெரிய ஆலமரம் இருந்தது. அந்த மரத்தின் அடியில் ஒரு பெண் கண் கலங்கியபடி உட்கார்ந்திருந்தாள். அவளுக்குப் பக்கத்திலே ஒரு குழந்தை படுத்திருந்தது. அவளுடைய கை; அடிக்கொருதரம் குழந்தையின் நெற்றியையும் உடம்பையும் தொட்டுப்பார்த்துக்கொண்டே இருந்தது.

அவளுடைய புருஷன் கல்யாணமான மறுவருஷமே, அவளை ஒரு குழந்தைக்குத் தாயாக்கிவிட்டு இறந்து போனான்.

புருஷனிறந்த பிறகு வயிற்றுப்பிழைப்பிற்காக ஒரு இடத்திற்குச் சென்று, வீட்டு வேலைக்கு அமர்ந்தாள். வேலை பார்த்த இடத்தில் அவளுடைய கற்பைக் காணிக்கை கேட்டார்கள். அவள் அதற்கு உடன்படாமல் வேலையைக் கைவிட்டாள். அன்று முதல் அவள் வீதியிலே கூலிதூக்க ஆரம்பித்தாள். அதில் வந்த வருமானம் அவளுடைய ஒருசாண் வயிற்றுக்கே போதாதபோது எப்படி வீட்டுவாடகை கொடுக்க முடியும்?

'வாடகை நாலுமாதப் பாக்கி' என்பதற்காக, வீட்டிலுள்ள

சட்டிபானைகளை வெளியே எடுத்துப்போட்டுவிட்டு, வீட்டுக்காரன் கதவை இழுத்து மூடினான்.

அன்றுமுதல் தாயும் குழவியும் மரத் தடிவாசிகளாயினர். இந்த நிலையில்தான் குழந்தைக்குக் காய்ச்சல் அடிக்க ஆரம்பித்தது. தர்ம ஆஸ்பத்திரிகளில் காண்பித்து மருந்து வாங்கிக் கொடுத்தாள். காய்ச்சல் குறைந்தபாடில்லை.

அன்றும் அப்படித்தான் குழந்தையைத் தூக்கிக்கொண்டு மருந்துவாங்கச்சென்றாள். குழந்தையைப் பரிசோதித்த டாக்டர் 'குழந்தை மிகவும் மோசமாக இருக்கிறது. நாளை வரும்போது ஐந்துரூபாய் கொண்டு வா, ஊசிபோடவேண்டும். இல்லாவிட்டால் குழந்தை பிழைப்பது அரிது' என்று கூறினர்.

பாவம்! நான்கு அணுவிற்கு அரைமைல் மூட்டை சுமப்பவள் ஐந்துருபாய்க்கு எங்கேபோவாள்?

ஃ ஃ ஃ ஃ

அழுது, அழுது அவளுடைய கண்ணீர்கூட வற்றி விட்டது. குழந்தையைப்பார்த்தாள். முனங்கியபடியே படுத்திருந்தது. கண்ணைமூடிக்கொண்டு தூங்க முயற்சித்தாள். அப்போது ஒரு ஆள் அவளைநோக்கி வருவது தெரிந்தது.

அவன் வெள்ளைநிற ஜிப்பாவும் பழைய கைலியும் தலையில் ஒரு கைக்குட்டையும் கட்டியிருந்தான்.

வந்த ஆள் அவளைப் பார்த்து 'யாரது அங்கே படுத்திருப்பது' என்று அதட்டினான்.

'என்ன....சாமி' என்று கேட்பதற்குள் அவள் தொண்டை அடைத்துவிட்டது.

'எழுந்து இந்தப்பக்கம் வா புள்ளே' அவனுடைய அதிகார ஒலி அவளை ஒடுங்கவைத்துவிட்டது. எழுந்து பேசாமல் நடந்தாள்.

நிலா வெளிச்சத்தில் அவளைத் தலைமுதல் கால்வரை பார்த்துவிட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டான்.

(தொடரும்)

சென்னைப் பதிவெண் 2099



## தெரிந்து கொள்ளுங்கள்

இந்தியாவில் மீன் துறை அபிவிருத்திக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 12கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

1955ல் மொத்தம் 67,46,390 ரூபாய் மதிப்புள்ள தேயிலைத் தயாரிப்பு யந்திர சாதனங்கள் இந்தியாவில் உற்பத்தி செய்யப் பட்டன.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் கிராமப்பஞ்சாயத்துகளின் எண்ணிக்கை 83,087லிருந்து 1,17,593ஆக அதிகரித்தது.

## "சந்தா-நேயர்களுக்கு"

அன்புடையீர்!

நமது இதழின் உறுப்பினர்களில் சந்தாப் பாக்கி உள்ளவர்களுக்கு 2-7-56ல் கார்டுகள் எழுதியிருக்கிறோம். ஒருசில அன்பர்கள் நீண்ட நாளான பாக்கியையும் உடையவர்களாயிருக்கிறார்கள். அன்பர்களின் ஆதரவே பத்திரிகையின் நல்வாழ்விற்குத் துணைசெய்வதென்பதைத் தெரிவித்துப் பாக்கிதாரர்களனைவரும் பாக்கிகளை மீண்டும் மீண்டும் அறிவிப்புக்கு இடம்வைத்துக்கொள்ளாமல் உடனே அனுப்பியுதவும்படி வேண்டுகிறோம்.

அன்புள்ள, அமைச்சர்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-42
துன்முகி-ஆடி-18
2-8-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரு 4
வெளிநாடு ரு 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## குறிஞ்சி

இரவுக் குறியில் வந்தொழுகுந் தலைவனிடத்துத் தோழி வழியினது ஏதஞ்சொல்லிவரைவுடன்படுமாறு கூறியது.

விளிவி லரவமோடு தளிசிறந் துரைஇ, மழையெழுந் திறுத்த நளிர் தூங்கு சிலம்பிற், கழையமல்பு நீடிய வானுயர் நெடுங்கோட், டிலங்கு வெள் ளருவி வியன்மலைக் கவாஅ, னரும்புவா யவிழ்ந்த கருங்கால் வேங்கைப், பொன்மரு ணருவீ கன்மிசைத் தாஅ, நன்மலை நாட நயந்-தனை யருளா, யியங்குநர் மடிந்த வயந்திகழ் சிறுநெறிக், கடுமா வழங்குத லறிந்து, நடுநாள் வருதி நோகோ யானே 257

:-வண்ணக்கன் சோருமருங்குமரனார்

அரும்புகள் வாயவிழ்ந்த கரிய காம்பையுடைய வேங்கை மரத்தினது பொன்னை யொத்த நறிய பூக்கள் பாறைகளின் மேல் உதிர்ந்து பரவியுள்ள நல்ல மலைநாடனே! எம்மை விரும்பி அருளாதவனாகி ஓயாத முழக்கத்தோடு மழை மிகுந்து இடியிடித்து மேகம் உயர்ந்து சென்று பெய்யத் தொடங்கிய குளிர்ச்சி மிகுந்த மலையில், மூங்கில்கள் நெருங்கிப் பரந்த- வனத்தில் உயர்ந்து நீண்ட சிகரங்களில் விளங்கிய வெண்மையாகிய அருவியையுடைய அகன்ற மலைப்பக்கத்தில் வழிப்போக்கர்கள் யாருமில்லாத, நீர் மிக்க சிறிய வழியிலே கொடிய சிங்க முதலிய விலங்குகள் வாழ்வதை யறிந்தும் நடு இரவில் நீ வருகின்றாய். இதற்கு யான் நோவை அடைகின்றேனல்லவா?

:-பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

நஞ்சிற் போலிகண்டர் கோடீச் சுரவெற்பி னண்ணுமிந்த
வஞ்சிக் கொடிதன் மலர்முக மேவிய வண்டுசென்றப்
பஞ்சித் தளிரடிப் பூங்கோம்பர் மீதேதிர் பாய்தலெண்ணின்
விஞ்சிக் கோடிக்கந்தக் கோம்பர்பற் றுமென்று மேற்சோல்வதே.

:—கோடீச்சுரக்கோவை-35

உரை:-'நஞ்சில் பொலி கண்டர்-விடத்தினால் விளக்கம் பெற்றுள்ள கழுத்தையுடையவராகிய சிவபெருமானது, கோடீச்சுர வெற்பில் - கோடீச்சுர மலையில், நண்ணும்-இருந்து வாழுகின்ற, இந்த வஞ்சிக் கொடிதன் - இந்த வஞ்சிக்கொடி போன்றவளாகிய தலைவியினது, மலர் முகம் மேவிய வண்டு-மலர் போன்ற முகத்திலேயுள்ள வண்டு போன்ற கண்கள், சென்று-போய், அப்பஞ்சித் தளிரடி-அந்தப் பஞ்சு ஊட்டப் பெற்றதளிர் போன்ற பாதங்களையுடைய, பூங் கொம்பர்மீது - பூவையுடைய கொம்பு போன்றவளாகியஉயிர்த் தோழியின்மீது, பாய்தல் எண்ணின்-பாய்வதை எண்ணினால், விஞ்சு-எல்லாவகையாலும் மேம்பட்ட, இச்கொடிக்கு - இந்தத் தலைவியாகிய கொடிக்கு, அந்தக் கொம்பர்-அந்தத் தோழியாகிய கொம்பு, பற்றும் என்று-பற்றுக் கோடாகுமென்று, மேல்-மேலே. சொல்வது-சொல்லுவதாய்இருக்கின்றது' என்பதாகும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைக்காலத்தில் வாழ்ந்திருந்த தமிழ்ப்பெரும் புலவர் பலருள், கொட்டையூர்ச் சிவக்கொழுந்துதேசிகரும் ஒருவர். புலவர்கள் தங்கள் புலமையைப் பிறருக்கும் பயன்படுத்தவேண்டுமானால், அதற்கு மூன்று வகையான கருவிகள் இருக்கின்றன. ஒன்று; செய்யுட்களை இயற்றி, அவற்றின் மூலமாகக் கருத்துக்களை வழங்குதல், இரண்டு;

உரைநடைகளை எழுதி அவற்றின் வாயிலாக உண்மைகளை உணர்த்துதல். மூன்று; பொது மேடைகளில் விரிவுரைகளையாற்றி அவற்றின் வழியாக அறங்களை வலியுறுத்துதல்.

இம்மூன்று வகையான தகுதிகளையும் உடையவர்களாகப் புலவர்கள் சிலரே இருந்திருக்கிறார்கள். இதனாலேயே 'ஆர்த்த சபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றாம்புலவர், வார்த்தை பதினாயிரத் தொருவர்' என்று பெரியோர் கூறினர். பாவலர், கட்டுரையாளர், விரிவுரையாளராகிய மூவருள் கட்டுரையாளரையும் விரிவுரையாளரையும் விடப் பாவலரே என்றும் நின்று நிலைக்கும் பெரும்பயனை நல்குகின்றவராவார். விரிவுரையாளரது உதவியை விரிவுரை நிகழும் நேரத்தில் உடனிருந்து கேட்பவரன்றி மற்றவர் பெற முடியாது. கட்டுரையாளரது உதவி அவரில்லாத இடத்திற்கும் சென்று பயன் தருவதொன்றே யென்றாலும், பாவலரது உதவியாகி வெளிவருகின்ற பாடல்கள் நிற்பது போலப் பொதுமக்களது நெஞ்சில் நிற்கின்ற தன்மை அதற்கில்லை அதனாலேயே பண்டைப் புலவரிற் பெரும்பாலோர், தங்கள் உளக் கருத்துக்களைச் செய்யுட்களில் வைத்து வழங்கிச் சென்றார்கள்.

சங்ககாலம் முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை வாழ்ந்திருந்த தமிழ்ப்புலவர்கள், செய்யுட்களினாலேயே தங்கள் அறிவாற்றலைப் புலப்படுத்திப் புகழ் பெற்றார்களென்பதற்கு, இப்போது நமக்குக் கிடைத்துள்ள தமிழிலக்கியங்களே போதிய சான்று பகருகின்றன. அறிவால் அளந்துகாண முடியாதவொரு பழய காலத்திலிருந்து, செய்யுட் செல்வத்தினாலேயே சிறப்படைந்து கொண்டுவந்த நமது தமிழன்னை, இப்போது சில ஆண்டுகளாக அச்செல்வத்தை இழக்கத் தொடங்கியிருக்கிறாளென்பதை நினைக்கும் பொழுது வருத்தந்தான் உண்டாகின்றது.

புலவர்களாயிருப்பவர்கள் முறையாகப் பாடல் யாப்பதற்கு உரிய பயிற்சியைக் கைக்கொள்ளாமலும் பொதுமக்கள் கவிச்சுவையறிந்து பாராட்டாமலும் இருக்கின்ற இழிதகைமை தமிழ்நாட்டிலிருந்து நீங்குதல் வேண்டும் போலிப் பாவாணர்களின் சரக்குகள் தமிழ்நாட்டில் செலவாணியாவது வியப்பிற்குரியதே. ஆலையில்லா ஊரில் இலுப்பைப் பூச் சர்க்கரை

இருக்கலாமேயன்றி இவுப் பைப்பூ இல்லாமையைக் காரணமாகக்கொண்டு ஆலேச்சர்க்கரையைப் பயன்படுத்துகிருேமென்று சொல்லுவது அறிவுடைமையாகாது. பாவன்மையில் உச்சநிலையை அடைந்த பெரும்புலவர்களைப் பெற்ற தமிழ்நாட்டில் போலிப் பாவாணர்களுடைய பொருளற்ற பாடல்களைப் பாராட்டுகின்ற அமைதி வந்து பொருந்தலாமா?

சொல்லும், பொருளும் போட்டியிட்டுக்கொண்டு முன்னே வந்து நிற்கச், சுவை மிக்க செய்யுட்களை யாத்துவழங்கிய பாவலர் வரிசையில் சிவக்கொழுந்துதேசிகர் விளங்குகின்ருர். சோழநாட்டில் தேவாரம் பெற்றதும் கொட்டையூரென்று வழங்கப்பெறுவதுமாகிய திருத்தலம், இவரது பிறப்பிடமாகும். இங்குள்ள கோடீச்சுரமென்னுங் கோயிலில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானைப் பாட்டுடைத் தலைவராக வைத்து 444 பாடல்களில் வைத்து 'கோடீச்சுரக்கோவை' என்னும் நூலை இவர் செய்துள்ளார். மற்றைக் கோவைகளிலெல்லாம் பெரும்பாலும் ஒரு துறைக்கு ஒரு பாடல்தானிருக்கும். இக் கோவையில், சிலசில துறைகளுக்கு இரண்டிரண்டு பாடல்களை இவ்வாசிரியர் அமைத்துள்ளார்.

அறிவானும் ஆண்மைமுதலியவற்ருனும் சிறந்த அரசகுலத்துக் கட்டிளங்காளையொருவன் ஏவலிளைஞரும், பாங்கரும் சூழ வேட்டையாடச் சென்று மாஞென்றைத் துரத்திக் கொண்டுவந்தான். அங்கே பாங்கியருடன் வந்து பூக்கொய்யும் பொருட்டு அவர்களைப் பிரிந்து தனித்துநின்ற பேரழகுடைய மலைவாழ் மங்கையொருத்தியைக் கண்டான். காட்சி ஐயம், தெளிவு, குறிப்பறிதல் முதலிய கைக்கிளை ஒழுக்கம் நிகழ்ந்தது.

பின்னர் இயற்கைப் புணர்ச்சியில் வண்டோச்சி மருங்கணைதல், மெய்தொட்டுப் பயிறல், முழுவற் குறிப்புணர்தல்,புணர்ச்சியின் மகிழ்தல் முதலியன நிகழ்ந்தன. வன்புறையில் தம்மைச் சேர்த்துவைத்தஊழ்வினையின் தன்மையைத் தலைவன் கூறித் தமது உளர்கள் ஒன்றற்கொன்று அணிமையில் உள்ளனவாதலின் பிரிந்துசென்று விரைந்து வருவேனென்றுதலைவியைத் தெளியவைத்தான்.

தலைவனது உறுதிமொழிகேட்டுத் தெளிந்த தலைவி, அவனைப் பிரிந்து பாங்கியர் கூட்டத்தை நாடிச் செல்லும்பொழுது, அவளது தோற்றம் அவனுக்கு மட்டற்ற மகிழ்ச்சியைத் தந்தது. உடனே அவளது பிரிவை நினைந்து அவன் மனங் கலங்கினான். பிரிவுழிக் கலங்கலில் 'பாங்கியர் கூட்டம் தலைவிக்கு வழிபாடு செய்வதைத் தலைவன் கண்டு இவ்வளவு பாதுகாப்பிலிருக்கும் இவளை நான் அடைந்து இன்புற்றது பொய்யோ' என எண்ணினான் இது 'ஆயவெள்ளம் வழிபடக் கண்டிது மாயமோ வென்றல்' என்று குறிக்கப்பெறும்.

எதிர்பாராத நிலையில் ஊழ்வினை கூட்டக் கொடுப்பாரும் அடுப்பாருமின்றித் தம்முட்டாமே கூடிக், களவிற் புணர்ந்து இன்புறும்படி செய்த இயற்கைப்புணர்ச்சிக்கு வாய்த்த வாய்ப்பு, இனி நிகழ வேண்டிய கூட்டங்களுக்கும் இயையாதல்லவா? எனவே பெரும் பாதுகாப்பிலிருக்கின்ற தலைவியை இனி எவ்வாறு கண்டு கலப்பது என்ற ஏக்கம் தலைவனுக்கு உண்டாயிற்று. அவ்வேளையில்தலைவியின் உயிர்த் தோழியின்மேல் அவளது பார்வை செல்ல அதனைக் கண்ட தலைவன் அத்தோழியை வாயிலாகக் கொண்டு உய்திபெறலாமென உவகையடைந்தான்.

'வாயில்பெற்றுய்தல்' என்னும் இத்துறைப் பொருளையுடையது மேலே கண்ட பாடல். உயிர்களுக்கு வாழ்வதைத் தருவது அமுதமும், சாவைத் தருவது நஞ்சுமாம். நஞ்சுண்டவர் உடனே யிறப்பது உலகியலிற் காணப்பெறுகின்ற ஒன்று. உலகியலுக்கு அப்பாற்பட்டவர் சிவபெருமானென்பதை உணர்ந்து கொள்ளுதற்கு அவரது நீலகண்டம் ஒன்றே தக்கசான்றாயிருக்கிறது விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ, ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்து அருள்செய்பவன். சிவபெருமானதலின், 'நஞ்சிற்பொலி கண்டர்' என்று அவன் உணர்த்தப்பெற்றான். 'முறையென அமரர் வேண்ட முனைந்த நஞ்சயின்று சான்றா, யுறையென மிடற்றில் வைத்தவும்பரான்' என்பார் பெரும்பற்றப் புலியூர் நம்பி.

தலைவியைக் கொடியாகக் கூறியதற்கேற்ப, அவளது முகத்தை மலராகவும் கண்களை

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

அன்றியும் அவர் தம்மை அச்சமயவாதிகளல்லாத நல்லறிஞரெனக் கூறி உலகிற்குப் பகிரங்கப்படுத்தியவருமாவர். கருமமலத்துண்மையை யுடம்படாத சமயிகள் அச்செவிடு முதலிய துன்பங்களுக்குக் காரணங்கூறவறியார். எதையேனுங்கூறினால் அது தெள்ளறிஞரின் சிரிப்புக்கிடனாகும். உலுத்தராவார் எந்தக் கூட்டத்திலுமுளர். நவீனருள்ளும் அன்னார் பலர் உபகரித்தற் கொருப்படாத தம் உலுத்த குணத்தை மறைக்க அவர் தம் கூட்டத்துப் பெற்றபயிற்சிக்குத் தக்கபடி ஏதாவதொன்றைச் சொல்லி மழுப்பத்தான் செய்வர். அது சகசம். நவீனருள்ளும் உலுத்தராவார் 'இச்செவிடராதியோர் உழைப்பாளிகளுக்குச் சுமையே, இவரால் சமூகத்துக்குப் பயன் என்?' எனப் பேசுவர். அல்லது வேறு பேசுவர். ஆனால் கருமமலத்துண்மையை நினைப்பூட்டுகிற அச்செவிடாதியோரிடம் அவ்வுண்மையையுடன்பட்ட சமயவாதிகள் தம்மைக் காத்துக்கொள்ளும் பொருட்டாவது அநுதாபங்காட்டி உபகரிக்கவே செய்வர். நவீனர் அவரைப் பரிகசிப்பதன்மூலம் அம்மலத்துண்மையை நிராகரிக்கிறார். அதுவும் நாஸ்திகமே. அது சைவத்தை வளர்ப்பதெப்படி?

'இந்துக்களின் எண்ணிக்கை ...குறைகிறது' என நவீனர் கூறியது காட்டப்பட்டது. 'ஹிந்து மதத்தில்....ஒவ்வொரு விஷயத்துக்கும் ருசுக் காட்ட முடியும்' (25-6-56 தினமணி) என்பதும் அவர் கூற்று. இந்துக்களின் தொகைக் குறைவைக் கண்டு ஓலமிடுகிற அவரிடம் சைவமக்களின் எண்ணிக்கை குறைகிறதா? இல்லையா? என்ற கவலைகிடையாது. அதுகிடக்க, இந்து என்ற சொல்லை அவர் அடிக்கடி வழங்குகிறார். ஹிந்தி என்பதே இந்துவாகும். நம் நாட்டுச் சமயங்களுக்கெல்லாம் சம்ஸ்கிருதத்திலேயே பேர்களிருந்துவருகின்றன. ஹிந்தி என்பது சம்ஸ்கிருதமா? அன்று. வேதசிவாகமங்களில் வந்துள்ள

எச்சமயத்துக்கும் அப்பெயரில்லை. தமிழகத்திலும் சைவ வைணவமாதியவற்றுக்கு ஆசிரியன்மாருளர். அவருந் தாமியற்றிய நூல்களில் தம் சமயங்களை அப்பெயரிட்டழைத்திலர். ஆரிய சமாஜமென்பது தயானந்தர் தோற்றிய சமயம். அதனோடு நெருங்கிய தொடர்புடையது ஹிந்தி மஹாசபையென்பது. அதன் தலைவராவது ஹிந்தி என்பதற்கு விளக்கங்கூறினாரா? இல்லையென்றே தெரிகிறது. அப்படி மறைக்கப்பட்டுக் கிடக்கிறது அச்சொற் பொருள். அதைக் கண்டெடுத்துப் பகிரங்கப்படுத்த வேண்டும். பழங்காலத்தில் பாரசீக வியாபாரிகள் கைபர்க்கணவாய் வழியாகப் பாரதத்தோடு வியாபாரஞ் செய்துவந்தனர்- அவர்கொண்டு வந்த சாக்குகளைப் பாரதத்தின் வடமேற்கெல்லையிலுள்ள மலைவாசிகள் அடிக்கடி கொள்ளையிடுவதுண்டு. அதனால் அப்பாரசிகர் அவரை ஹிந்துக்களென்றழைத்தனர். ஹிந்தி என்பது பாரசிகபதம். கொள்ளைக்காரன், அடிமை, கறுப்பன் என்பன அதற் கருத்தம். அந்த ஹிந்துக்கள் வசித்துவந்த ஸ்தானம் ஹிந்துஸ்தானமாயிற்று- ஹிந்துஸ்தானம் - கொள்ளைக்காரன் வாழுமிடம். ஹிந்துஸ்தானமென்பது நாளடைவில் பாரதம் முழுவதையும் பற்றி இந்தியாவுமானது. அயல்நாடாகிய சீன முதலியவற்றிலிருந்து இங்குவந்த யாத்திரிகரும் அப்பெயரை வைத்தே இந்நாட்டுச் சரித்திரக்குறிப்புக்கள் எழுதினர். பின்னர் வந்து பன்னூறுண்டுகள் இத்தேசத்தையாண்ட மன்னர் இசுலாமியர். அவரும் இத்தேசத்தை இந்தியாவென்றும், இத்தேசத்தினரை இந்துக்களென்றுமே கொண்டனர். இக்காலை அரசியல் முழக்கமும் ஜெய்பாரத் என்பதன்று, ஜெய்ஹிந்த் என்பதே. அவ்வயல்மொழி இந்நாட்டுச் சிலபல சமயங்களுக்கு ஒரு பொதுப் பெயராயும் அமைந்து விட்டது. என்னே அதன் ஆதிக்கம்!

சரித்திர ஆசிரியன்மார் சிலர் புறப்பட்டனர். அவருக்கு அச்சொல்லின் பொருள் அறியவருமோ? வாரதோ? அவர் அச்சொல்லிற் புதுப்பொருளொன்றைப் புகுத்தினர். ஸிந்து நதி பாயப்பெற்ற பிரதேசத்தில் தோன்றிய மதம் அது, ஆகலின் அது ஹிந்துமதமெனப் பெயர் பெற்றது, காலக்கிரமத்தில் அந்த ஸிந்துமதமென்பது ஹிந்துமதமென மருவிற்று என்பது அது.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

# செட்டிநாடு

துன்முகி ஆடி - 18

## நமது நகரசபை

தேவகோட்டை நகரம், **1937**ம் ஆண்டில் பஞ்சாயத்து போர்டு நிர்வாகத்திலிருந்து, முனிசிபல் நிர்வாகத்திற்கு மாற்றம் பெற்றது. சென்னைமாகாணத்திலுள்ளமுனிசிபாலிட்டிகளுள், தேவகோட்டை முனிசிபாலிட்டிக்கெனச் சிலசிறப்பியல்புகள் உள்ளன. அவற்றுள் ஒன்று; முனிசிபல் ஆக்டில் உள்ள உச்ச அளவுச் சொத்து வரியை அது வசூலிப்பதாகும்.

**1951**ம் ஆண்டில் எடுத்த சனத்தொகைக் கணக்குப்படி தேவகோட்டையில் வாழுகின்ற மக்களின் எண்ணிக்கை ஏறக்குறைய **26340** ஆகும். அரசாங்கத்தாரால் இது மூன்றுவது வகுப்பு முனிசிபாலிடியாகப் பிரிக்கப்பெற்றிருக்கிறது. $4\frac{5}{8}$ சதுரமைல் பரப்புள்ள இந்நகரம் **18**வார்டுகளாகப் பகுக்சப் பெற்றுள்ளது.

இந்நகரத்தில் வசிப்பவர்களில் பெரும்பாலானவர்கள் நாட்டுக் கோட்டைச்செட்டியார்கள் இவர்களிடம் இயல்பாயமைந்த சில நற்குணங்களும் செயல்களும்உள்ளனவென்றுலும், சிற்சில பொருந்தாத செயல்களும் இருக்கின்றனவென்பதை எவரும் மறுக்க முடியாது. அப்பொருந்தாதன சிலவற்

றுள் தேவைக்கதிகமான பெரிய வீடுகளைக் கட்டியிருப்பது மென்று.

'இடம்பட வீடெடேல்' என்ற அறநூலுரையும் சிறுகக் கட்டிப் பெருகவாழ்' என்ற பழமொழியும் தொன்றுதொட்டு வழங்கி வருகின்ற நம்நாட்டில் கையிலுள்ள பொருளைக்கொண்டு அவசியமில்லாத வகையில் பெரிய வீடுகளைக்கட்டி விட்டு, அவற்றில் ஏற்படும் பழுதுகளைப் பார்க்கமுடியாதுதவிக்கின்ற செட்டியார்களும் தேவகோட்டையிலிருக்கத்தான் செய்கிறார்கள். ஆனால் இதைப்பற்றி முனிசிபாலிடிக்குச் சிறிதும்கவலையில்லை. எவ்வளவு கடுமைப்படுத்தி வரியை வசூலிக்க முடியுமோ-அவ்வளவு கடுமையும் செய்து இங்கே வரிவசூலுக்கு வழிசெய்யப் பெறுகிறது. முனிசிபல் மீட்டிங்அஜண்டா ஒவ்வொன்றிலும், பிராசிகியூஷன்-சிவில்சூட்டுக்கள் சம்பந்தமான செலவுகளுக்கு அநுமதி கோரும் விஷயங்கள் அதிகமாகவும் தொடர்ந்தும் இருப்பதுகொண்டு இதை நன்கு அறியலாம்.

முனிசிபாலிட்டியின் **55-56**ம் ஆண்டு நிர்வாக அறிக்கையில் 'நகரத்தில் பொருளாதார நிலைமை நாளுக்கு நாள் க்ஷீண திசை அடைந்து வருகிறது. அதனால் வரிவசூல் பாதிக்கப்படுகிறது. வருமானத்தை அதிகப்படுத்த வேறு மார்க்கங்களில்லை. அநேகருக்கு சமீபத்தில் ஏற்பட்ட புயலால் வீடுகள் இடிந்து விழுந்தன. வரிவசூல் கஷ்டமாகயிருக்கிறது என்ற குறிப்புக் காணப்பெறுகிறது.

நகரத்தின் பொருளாதாரநிலைமையைச் சிந்திக்கும்பொழுது, சிப்பந்திகள் சம்பளம் முதலிய நிர்வாகச் செலவுக்கே பெருந் தொகையை விழுங்கிக்கொண்டிருக்கிற முனிசிபாலிடி இந்நகரத்திற் கேற்றதில்லை என்ற முடிவே நன்மக்களுக்கு உண்டாகும். இந்த முடிவு, செல்வாக்குள்ள ஒருசிலருக்கு ஏற்படாததால், பஞ்சாயத்துபோர்டு காளில் ஒரு ரூபாய் வரிக் கட்டியவர்கள் இன்று பத்துரூபாய் வரிக் கட்டி ஒழுங்கான பயன் கிடைக்காது வருந்திக் கொண்டிருக்கிறார்கள்.

பிடிவாத மனப்பான்மையை விட்டுப் பொதுமக்களின் நலத்தில் கருத்துக்கொண்டு நகரப்பிரமுகர்களும் அரசாங்கமும் உதவி செய்ய முன்வந்தால் நல்லதென்பதுதான் நமதுநகரசபையைப்பற்றி நம்முடையதும் நகர மக்களுடையதுமான எண்ணமாகும்.

---

## இந்தியன் ஓவர்சீஸ் பாங்க்

30-6-1956உடன் முடிவடைந்த ஆறுமாதங்களுக்குவங்கியின் நிகரவருமானம் (ஆடிட்டுக்குட்பட்டது) முன் வருடக் கணக்கிலிருந்து கொண்டு வரப்பெற்ற தொகையையும் சேர்த்து ரூ 17,21,271-8-3 ஆகும்.

## தேவகோட்டை

கந்தர்சஷ்டி விழாக் கழக மஹாசபைக் கூட்டம் 13-8-56 வெள்ளிக்கிழமை மாலை 6 மணிக்கு நகரச் சிவாலய மஹா மந்திரோபதேச மண்டபத்தில் நடைபெறும். அவ்வமயம் பதினோராவது ஆண்டுக்கு நிர்வாகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கவும் மற்றும் இதர விஷயங்கள் ஆலோசனை செய்து தீர்மானம் செய்யவும் பெறுமென்று செயலாளர்கள் அறிவிக்கிறார்கள்

## அருள்நெறித்திருக்கூட்டம்

சென்ற ஜெய வருடம்பங்குனி மாதத்திற் குன்றக்குடி அடிகளார் கல்கத்தாவிற்கு விஜயம் செய்தபோது இட்ட கட்டளையைமனதிற் கொண்டு 3-6-56ல் திரு கோ வல்மீகநாத பிள்ளையைத் தலைவராகவும் திரு அரு சொக்கலிங்கத்தை உப-தலைவராகவும் திருவாளர்கள் பெரி சோமசுந்தரம்செட்டியார் ந சிங்காரம் எஸ் ராமலிங்கம்பிள்ளை முதலியோர்களை அங்கத்தினர்களாகவும் திருவாளர்கள் பி எஸ் வரதராஜஐயர், மா கருப்பையா ஆகியவர்களைக் காரியதரிசிகளாகவும் கொண்ட நிர்வாகக் குழுவோடு கல்கத்தாவில் அருள்நெறித் திருக்கூட்டக் கிளைச்சங்கம் நிறுவப்பட்டது. முதலாவதுஆண்டு விழா 29-7-56ல் திரு அரு சொக்கலிங்கம் தலைமையில் சிறப்புடன் நடந்தது. திரு பரமானந்தம்பிள்ளை சங்கத்தின் வளர்ச்சி குறித்த வாழ்த்துப்பா ஒன்று வாசித்தளித்தார்கள். காரியதரிசி மா கருப்பையா ஆண்டு அறிக்கை வாசித்தார். விழாவில் திரு ந சிங்காரம் 'ஞானசம்பந்தர்' பற்றியும் திரு அரங்க சீனிவாசன் 'நம்மாழ்வார்' பற்றியும் திருவாசகமணி திரு வெங்கு சுவாமி 'திருவாசகம்' பற்றியும் இனியசொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். தலைவர் அருள்நெறித் திருக்கூட்டத்தின் தொண்டுகளையும் கொள்கைகளையும் விளக்கிக் கூறினார்கள். திரு கருப்பையா நன்றிகூற விழா இனிது நிறைவேறியது. ஆண்டு விழாவுக்கு ஸ்ரீலஸ்ரீ குன்றக்குடி அடிகளார்,

நிதிக்கமிஷன் தலைவர் திரு சந்தானம் ஆகியோர்களிடமிருந்தும் மற்றும் பல பிரமுகர்களிடமிருந்தும் வந்த வாழ்த்துச் செய்திகளை திருமா கருப்பையா வாசித்தார்.

## தென்காசி

திருவள்ளுவர் கழகத்தில் 19-7-56ல் செங்கோல் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தரசத்தியஞானபரமாசாரியசுவாமிகள் தலைமையில்சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. ஆத்மீகச் சிறப்புப் பற்றிய விரிவான தலைமையுரைக்குப்பிறகு திரு அ நடேசமுதலியார் அவர்கள் வள்ளுவர் சொல்லோவியம் என்னும் பொருள் பற்றி அரியதோர் விரிவுரைசெய்தார்கள். முதலில் கழகத்தலைவர் உயர்திரு ஐ ஏ சிதம்பரம்பிள்ளை எம் ஏ அவர்கள் வரவேற்புரை கூறினார்கள. கூட்ட. முடிவில் கணபதியப்பன் அவர்கள் நன்றி கூறக் கூட்டம்இனிதுமுடிந்தது

திரு ஐ சி ஈசுவரன்பிள்ளை அவர்கள் உயர்நிலைப் பள்ளியில் செங்கோல் ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகசுந்தர சத்திய ஞான பரமாசாரியசுவாமிகளால் 27-7-56ல் மாணவர்கள்இலக்கிய மன்றம் ஆரம்பித்து வைக்கப்பட்டது.சுவாமிகள்இலக்கியச்சொற்பொழிவு பல உதாரணங்களுடன் விரிவாக நிகழ்த்தினார்கள்.

ஆதீனவித்துவான் அண்ணாவி இராமகிருஷ்ணன் அவர்களும் சொற்பொழிவுசெய்தார்கள்.முடிவில் திரு தமிழாசிரியர் ல சண்முகசுந்தரம் அவர்களால் நன்றி கூறப்பெற்றுக் கூட்டம் இனிது முடிந்தது,

---

## திருச்செந்தூர்

மேலமாட வீதியிலுள்ள ஸ்ரீ ஆலாலசுந்தரர் சிவாசாரிய சங்கத்தில் 11, 12-8-56உகளில் முறையே திருமுறை விழாவும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளின் ஆடிச்சுவாதி நட்சத்திர விழாவும் நடைபெற இருக்கின்றன.

## தங்கம், வெள்ளி

| .மதுரை | ஆகஸ்-1 |
|---|---|
| பாட்லா | 104 8 0 |
| சவரன் | 67 12 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 66 8 0 |
| வெள்ளி 100தோலா | 176 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 13 0 |

(5ம் பக்கத் தொடர்ச்சி)

வண்டுகளாகவும் கூறினர். வண்டின் இயல்பு பூவைச்சார்ந்திருத்தலேயாதலின், அதற்கேற்பத் தோழியையும் பூங்கொம்பர் என்று குறித்தார். தளிரடியையுடைய பூங்கொம்பர் என்ற நயமும் அறிந்து மகிழுதற்குரியது.

கொள்கொம்பின் பற்றின்றிக் கொடி செழித்து வளருவதில்லை. கொடியின் வளர்ச்சிக்குக் கொள்கொம்பு எவ்வளவு இன்றியமையாததோ, அவ்வளவு இன்றியமையாதது தலைவியின் மன மகிழ்ச்சிக்குத் தோழியின் கூட்டுறவு என்பதைத் தலைவன் உணர்ந்தபடியினாலேயே கொடிகொம்பாக அவர்களிருவரையும் அவன் கண்டான்.

கொம்பின் உதவியை இடைவிடாது எதிர்பார்த்து வாழும் கொடியைப் பிடிப்பதற்கு, அக் கொம்பையே வாயிலாகப் பெறத் துணிந்த தலைவன், உய்திபெற்றே தீருவானென்பதில் ஐயமுண்டோ?

---

## நோட்டீஸ்

பரமக்குடி டி. மு. கோர்ட்டு

O, S, 10 of 1955

I, A; 640 of 1955

முகம்மது மாரியத்பீவி

— மனுதார் (வாதி)

O. K, M. P. காதர் முகைதீன்

— எதிர்மனுதார் (பிரதிவாதி)

டிஸ்டிரிக்ட் கோர்ட்டு டிபாஸிட்டிலிருக்கும் ஒத்தித் தொகை ரூ 366-10-8யும் பெற்றுக் கொண்டு ஒத்திச் சொத்தை வாதிவசம் ஒப்புவிக்க பைனல் டிக்கிரி கோரி மனுச் செய்து பிரதிவாதி ஆஜராகக் கடைசியாக 9-8-56உ வாயிதா என்று அறிவிக்கலாயிற்று.

R. கோவிந்தாச்சாரியார்

பரமக்குடி 25-7-56 } மனுதார் அட்வகேட்

## பெரியபுராணப் பிரசங்கம்

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற அறக்கட்டளை நிதியிலிருந்து 4-8-56 முதல் 12-8-56வரை மதுரைஆடிவீதி திருவருள் தவநெறி மன்றக் கூட்டுவழிபாட்டு மண்டபத்தில் திருஞானசம்பந்த சுவாமிகள் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர தேசிக பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் தலைமையில் நாடோறும் மாலை 7மணிக்குச் சைவப் பெரும் புலவர்களால் பெரிய புராணச் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெறும்.

## திலகர் ஜயந்தி

இலக்குமிபுரம் சொக்கலிங்க வித்தியாசாலையில் 23-7-56காலை லோகமான்ய பால கங்காதர திலகரின் நூறுவது பிறந்த தின விழா வித்தியாசாலைத் தலைமை ஆசிரியர் திரு ஜி சுவாமிநாதய்யரவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. இறைவணக்கத்திற்குப்பின் திலகரின் வாழ்க்கை தேசசேவைமுதலியன விரிவாக எடுத்துரைக்கப்பெற்றுத் திலகர் போல ஒவ்வொருவரும் நாட்டுப் பற்று மொழிப்பற்று உள்ளவர்களாய் வாழ வேண்டுமென்று விளக்கப்பட்டது. மாணவ மாணவிகளின் பாட்டு, பேச்சு, கும்மி, கோலாட்டம் நடைபெற்றன. தலைவர் முடிவுரைக்குப் பின் மாணவ மாணவிகளுக்குத் தின்பண்டம் நல்கித் தேசீய வாழ்த்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

## திருமுறை விழா

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களின் திருவருள் ஆணைப்படி தில்லை ஸ்ரீ நடராஜப் பெருமான் ஆலயத்தில் திருமுறை கண்டு எடுக்கப்பெற்ற நால்வர் சந்நிதியில் 12-8-56 இரவு 8 மணிக்குத் தொடங்கித் திருமுறைவாணர் பதின்மூவர் திருமுறை ஓதிச் சிவமே நிலவிய திருவீதிவலம் வருவார்கள்.

## கல்வி வசதி

மேற்குப்பாகிஸ்தானிலிருந்து இடம்பெயர்ந்து வந்துள்ளமாணவர்களின் கல்விவசதிக்காக யூனியன் புனர்வாழ்விப்பு மந்திராலயம் 1956மார்ச் 31ந்தேதி வரையில் மொத்தம் 5.61கோடிரூபாய் செலவழித்திருக்கிறது.




(சென்ற வாரத் தொடர்ச்சி)

ஏய், இந்த ஆலமரத்தடி உனக்குச் சொந்தமினு நெனச்சியா?

இல்லே சாமி....தெரியாமல் படுத்துவிட்டேன்.

'ஆமா, அது யாரு அங்கே படுத்திருப்பது?' குரலில் அதிகாரம் கிடையாது.

அது, என் குழந்தை சாமி, மூணுநாளாக் காய்ச்சல் சாமி

'மூணு நாளாவா, அடப்பாவமே! ஏன் ஒரு டாக்டர் கிட்டேயும் காண்பிக்கலியா'' இப்போது அவனுடைய குரலில் இரக்கம் காணப்பட்டது.

ஏதோ, தர்ம ஆஸ்பத்திரியில் காண்பித்து மருந்து வாங்கிக் கொடுத்தேன். ஆனால்க்காய்ச்சல் குறையவில்லே.

அவன் ஒரு திட்டத்தோடு பேச ஆரம்பித்தான். 'காய்ச்சல் குறையலேன்னா அது யோசிக்க வேண்டிய விஷயம்தான்!'

'ஆமா சாமி இன்னிக்குக்கூட டாக்டரய்யா ஐந்துரூபாய் இருக்தாக் கொண்டுவா. ஊசிபோடனும். இல்லாட்டிக் குழந்தை பிழைப்பது கஷ்டமினு சொல்லிட்டாரு.

இந்தா புள்ளே நான் ஐந்து ரூபாய் தர்றேன். நான் சொல்றபடி கேளு,

ஐந்து நிமிடங்கள அவர்கள் ஏதோ பேசினார்கள். முடிவில் அவள் 'அய்யோ சாமி' என்று கூச்சலிட்டாள். அதற்கு அவன் ஏதோ சமாதானம் கூறினான். அவள் குழந்தையை நோக்கினாள். குழந்தைமுனங்கியபடியே புரண்டு படுத்தது.

திடீரென்று ஒரு முடிவுக்கு வந்தவள்போல் தான் படுத்திருந்த சேலையை எடுத்துக் குழந்தைக்குப் போர்த்தி விட்டு அந்த ஆசாமியுடன் நடந்தாள்.

கொஞ்ச நேரத்திற்குள் அவர்கள் அந்தப்பிரயாணிகள்தங்கும் விடுதியின் முதல்நம்பர் அறைக்கு முன்னே நின்றார்கள்.

அறைக்கதவு திறக்கப்பட்டது. அவளை ஒதுங்கி இருக்கச் சொல்லிவிட்டு, அவன் மட்டும் உள்ளே சென்றான். அவளை ஒரு தலைநரைத்த உருவம் வரவேற்றது. அவன் சிரித்தான். அந்தச்சிரிப்பில்தான் என்ன அர்த்தமோ தெரியவில்லை. இரண்டு நிமிடங்களில் அவன், அவர் மிச்சம் வைத்திருந்த ஆகாரங்களைச் சுருட்டிக்கொண்டு அவளை உள்ளே போகும்படி சொல்லிவிட்டு வெளியேறினான்.

அவள் நடுங்கியபடியே அந்த அறைக்குள் சென்றாள்.

அவளைப் பார்த்தவுடன் அந்தப் பெரியமனிதர் பல்லை இளித்தார்.

ஃ ஃ ஃ

பொழுது விடிவதற்கு இன்னும் சிறிதுநேரம் இருந்தது. முதல்நம்பர் அறையிலிருந்து அந்தப் பிச்சைக்காரி தள்ளாடியபடியே வெளியே வந்தாள். அந்த மங்கலான வெளிச்சத்தில் அந்த அறையின் கதவில் ஒரு போர்டு தொங்குவதுதெரிந்தது. அதில் "எம். கருணாகரம்பிள்ளை தொழிலாளர் தலைவர்" என்று எழுதி இருந்தது.

அவள் பழச்சக்கைபோல் ஜீவன் இல்லாதவளாகத் தள்ளாடியபடியே ஆலமரத்தடிக்கு வந்து சேர்ந்தாள். அவள் உடம்பு முன்னைவிட அதிகமாக ஆடியது. அவளுடைய கையில் இருந்த புது ஐந்துரூபாய் நோட்டுக்கூடத் தடதடவென்று ஆடியது. குழந்தை முனங்காமல் தூங்குகிறது என்று நினைத்துக் குழந்தையின் அருகே சென்று கையை வைத்துப் பார்த்தாள். வீல் என்று கத்தியபடியே கீழே சாய்ந்தவள் மீண்டும் எழுந்திருக்கவேயில்லை. அவள் கையில் இருந்த அந்த ஐந்து ரூபாய் நோட்டுப் பக்கத்திலுள்ள சாக்கடையில் போய் வீழ்ந்தது.

ஃ ஃ ஃ

பொழுது நன்றாக விடிந்து விட்டது. ரோட்டின் ஓரத்தில் இரண்டு அநாதைப் பிணங்கள் கிடப்பதை அந்த வழியேசென்ற ஒரு போலீஸ்காரர் கண்டார். கொஞ்சநேரம் சென்றவுடன் ஒரு குப்பைலாரி வந்து இரு உடல்களையும் தூக்கிப்போட்டுக் கொண்டுசென்றது

---

## பொதுத் தேர்தல்

பெங்களூர் ஜூலை 24-

வருகிற பிப்ரவரிமாதம் முதல் 2வாரங்களில் (1ம் தேதி முதல் 15ம் தேதிவரை) பொதுத்தேர்தல் நடக்கலாமென்றும் இதற்கேற்ப எல்லா நடவடிக்கைகளையும் தேர்தல் குழு எடுத்துக் கொண்டு வருகிறதென்றும் இங்கு இன்று இந்தியத் தேர்தல் தலைமைஅதிகாரி தெரிவித்தார்.

தேர்தல் சம்பந்தமாக இங்கு இரண்டு நாட்களாக பம்பாய், சென்னை, மைசூர், ஐதராபாத், ஆந்திரா, திருவாங்கூர்-கொச்சி குடகு ஆகிய மாகாணங்களின் தேர்தல் அதிகாரிகளுடன் கூடி திரு சுகுமார்சென் ஆலோசனை நடத்தினர். இந்த ஆலோசனைகளுக்குப்பின்பு பத்திரிகையாளர்களிடம் திரு சென் தொடர்ந்து கூறியதாவது:

வாக்குப்பதிவு செய்வது ஒவ்வொரு மாகாணத்திலும் 15 நாட்களுக்குள் நடக்கும்படி ஏற்பாடு செய்யப்படும்.

சென்ற பொதுத் தேர்தலில் பயன்படுத்தப்பட்ட வாக்குப் பதிவு செய்யும் பெட்டிகளே வருகிற பொதுத் தேர்தலிலும் பயன்படுத்தப்படும்,

தொகுதிகளை நிர்ணயம் செய்வது நவம்பர் மாத இறுதிக்குள் முடிவடைந்துவிடும். இதற்கான பூர்வாங்க வேலை தற்போது நடந்துவருகிறது. புதியசட்டம் நிறைவேற்றப்பட்டவுடன் தொகுதிநிர்ணய வேலைவேகமாக மேற்கொள்ளப்படும்.

## தேஷ்முக் பதவி விலகல்

புதுடில்லி ஜூலை 24.

மத்திய அரசாங்கநிதிஅமைச்சர் திரு சி டி தேஷ்முக்கின்பதவி விலகலை இந்தியக் குடியரசுத் தலைவர் ஏற்றுக்கொண்டார். நிதி அமைச்சர் துறையை இன்றிலிருந்து தலைமையமைச்சர் நேரு மேற்கொள்வார்என்று அதிகாரபூர்வமாகத்தகவல்கூறுகிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-43
துன்முகி-ஆடி- 25
9-8-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## நெய்தல்

பகற்குறிக்கண் வந்த தலைவனைத் தோழி நெருங்கித், தலைவியின் இற்செறிப்பை அறிவுறுத்தி வரைவு தோன்ற உரையாடியது

பல்பூங் கானற் பகற்குறி மரீஇச், செல்வல் கொண்க செறித்தனள் யாயே, கதிர்கால் வெம்பக் கல்காய் ஞாயிற்றுத், திருவுடை வியனகர் வருவிருந் தயர்மார், பொற்றொடி மகளிர் புறங்கடை யுகுத்த, கொக்குகிர் நிமிரன் மாந்தி யெற்பட, வகலங் காடி யசைநிழற் குவித்த, பச்சிறாக் கவர்ந்த பசுங்கட் காக்கை, தூங்கல் வங்கத்துக் கூம்பிற் சேக்கு, மருங்கூர்ப் பட்டினத் தன்னவிவ, ணெருங்கே ரல்வளை யோடுவ கண்டே. 258 :-நக்கீரர்

கொண்கனே! வெயில் சுடுதலால் நடைகொள்வோரது கால்கள் சுடும்படி கீழ்த்திசையில் உதித்துச் சாய்கின்ற கதிரவனது இயக்கம் பொருந்திய பகற்பொழுதில் செல்வமுடைய அகன்ற நகரத்தில் வருகின்ற விருந்துகளைப் பாதுகாப்பதற்குப் பொன்வளையல்களை அணிந்த பெண்கள் சமைத்து, முற்றத்திலே உகுத்த கொக்கின் உகிரை யொத்த சோற்றைத் தின்று, மாலைப் பொழுதில் அகன்ற மீன்கடையில் அசைகின்ற நிழலிலே குவித்த பசிய இரு மீன்களைக் கவர்ந்த பசுமையாகிய கண்ணையுடைய காக்கை, காற்றாலசைகின்ற தோணியிலே பிணித்த பாய்மரத்திற் சென்று தங்குகின்ற மருங்கூர்ப்பட்டினம்போன்ற இவளுடைய நெருங்கிய அழகும், ஒளியுள்ள வளைகளும் கழலுவதைக் கண்டு அன்னை இல்வயிற் செறித்துவிட்டாள். அதனால் பலவாகிய மலர்களையுடைய கடற்கரைச் சோலையில் பகற்பொழுதில் குறியிடத்திற்கு யான் வந்து போகின்றேன். :-பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

**காவி யுகுநீருங் கையிற் றனிச்சிலம்பு**
**மாவி குடிபோன வவ்வடிவும்-பாவியேன்**
**காடெல்லாஞ் சூழ்ந்த கருங்குழலுங் கண்டஞ்சி**
**கூடலான் கூடாயி னான்.** :-இளங்கோவடிகள்

உரை: 'காவி உகு நீரும் - நீல மலர் போன்ற கண்கள் சிந்திய நீரையும், கையில் தனிச் சிலம்பும்-கையிலே யிருந்த ஒற்றைச் சிலம்பையும், ஆவி குடி போன-ஆவியானது பிரிந்து வேறிடத்திற்குக் குடியாகச் சென்ற, அவ்வடிவும்-அந்த வடிவத்தையும், காடு - காடு போல, எல்லாம் சூழ்ந்த-உடம்பு முழுவதும் பரந்துகிடந்த, கருங்குழலும் - கருமையான கூந்தலையும், கண்டு-பார்த்து, அஞ்சி-அச்சங்கொண்டு, கூடலான் - மதுரைப் பதிக்கு மன்னனாகிய பாண்டியன், கூடு ஆயினான் - உயிர் பிரிந்துபோகக் கூடாக ஆகிவிட்டான்' என்பதாகும்.

தமிழ்ப்பெருங் காப்பியங்கள் ஜந்தனுள் ஒன்றாகிய சிலப்பதிகாரம் ஒரு வரலாற்று நூல். செந்தமிழ்நாட்டு முடியுடை வேந்தர் மூவருள் சேரமன்னர்கள், முதலில் வைத்து எண்ணப் பெறுபவர்களாவார்கள். அவர்கள்பரம்பரையில்சேரலாதனென்னும் மன்னனுக்கு மைந்தனாக-செங்குட்டுவனுக்கு இளவலாக இளங்கோ தோன்றினார். உலக நிலையாமையை உணர்ந்து அரச போகத்தை வெறுத்துத்துறவை மேற்கொண்டிருந்ததால் இளங்கோவடிகளென இவர் அழைக்கப்பெற்றார். சேரலாதன் இமயம்வரை சென்று தனது விற்கொடியை அதன் உச்சியில் கட்டி, அந்நாட்டு மன்னர்களை அடிப்படுத்தி அரசுபுரிந்தவன். அவ்வடநாட்டு மன்னரில்இருவர் வழக்கத்தைப் பிடித்திரை? செலுத்தமறுக்க தனலேயே

சேரலாதனின் மைந்தனும் அவனுக்குப்பின் அரசு செலுத்திய செங்குட்டுவன், வடநாடுசென்று கனக விசயரென்னும் அவ்விரு மன்னர்களையும் வென்று, இமய மலைக்கல்லை அவர்கள் முடிகளிலேற்றிக்கொண்டு வந்து கண்ணகிக்கு வடிவஞ் சமைத்து வழிபட்டான். 'குமரியொடு வடவிமயத் தொருமொழி வைத்துலகாண்ட சேரலாதன்' எனத் தன் தந்தையை இவ்வாசிரியரே நமக்கு அறிமுகப்படுத்தி வைக்கின்றார்.

'குணவாயிற் கோட்டத் தரசு துறந்திருந்த, குடக்கோச் சேரல் இளங்கோவடிகள்' என்பது சிலப்பதிகாரப் பதிகத்திற் கண்டது. 'குணவாயில் என்பது திருக்குணவாயிலென்பதோரூர், அது வஞ்சியின் கீழ்த்திசைக் கண்ணது. ...இளமைப் பருவத்தே இராசபோகத்தைத் துறத்தல் அருமையால் துறந்தென்றும், அங்ஙனம் போகம் நுகர்ந்த விடத்தே மீட்டுந் தவவுருத் தாங்கியிருத்தலருமையான் இருந்தென்றும் கூறினார்' என்பது அடியார்க்கு நல்லார் உரை.

சோமன்னர் பரம்பரையில் தோன்றிய இவ்வாசிரியரை இவரது நூல்கொண்டு இன்ன சமயத்தவரென்று உறுதிசெய்து கொள்ள முடியாதிருப்பினும், தாம் நின்ற துறவுநிலைக்கேற்ப எந்தப்பொருளிலும் விருப்பு வெறுப்பில்லாதவராய் உள்ளதை உள்ளபடி உணர்த்தும் உயர்வுடையவராய் இவர் விளங்கினாரென்பது போன்ற சிறப்பியல்புகளை நாம் நன்கு உணர முடிகின்றது.

கோவலன்—கண்ணகியினது வாலாற்று நிகழ்ச்சிகள் நிகழ்ந்த காலமும், இந்நூலாசிரியர் வாழ்ந்திருந்த காலமும் ஒன்றேயென்று அறியப் பெறுவதால், இதிலுள்ள செய்திகளில் எதையும் புனைந்து கூறியதென்று கொள்ளுவதற்கு இடமில்லை. உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகத் - தமிழ் நாட்டு நாடகக் காப்பியமாக ஒப்பற்று விளங்கிக் கொண்டிருக்கின்ற இந்நூல், காதை என்னும் பெயருடைய பகுப்புக்கள் முப்பது கொண்ட மூன்று காண்டங்களாகப் பகுக்கப் பெற்றுள்ளது.

ஊழ்வினை யுருத்து வந்தூட்டுமென்பதைச் சோழநாட்டு வாழ்க்கையில் தொடங்கிக் காட்டி, அரசியல்பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதை

பாண்டிநாட்டு நிகழ்ச்சியிலும், உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலைச் சேரநாட்டு நிகழ்ச்சியிலும் வைத்துவிளக்குவது சிலப்பதிகாரக் கதை.

புகாரும், மதுரையும், வஞ்சியுமாகிய மூன்று தலைநகரங்களின் பெயராலும் பாகுபாடு பெற்ற இந்நூலில் மதுரைக் காண்டம் பதின்மூன்று காதைகளையுடையது. அதில் பத்தாவதாகிய வழக்குரை காதையின் இறுதியில் மூன்று வெண்பாக்கள் உள்ளன. அவற்றுள் இரண்டாவதாக இருக்கின்ற வெண்பாவே மேலே காணப்பெறுவதாகும்.

கானல்வரி பாடிய மாதவியைக் கருத்து வேறுபட்டாளென்று கருதிப் பிரிந்த கோவலன், கண்ணகியை அடைந்து அவளது காற்சிலம்பை விற்று வாணிபஞ் செய்ய எண்ணி, மதுரைப் பதியை அடைந்தான். நகர்ப்புறத்தேயுள்ள இடையர் சேரியில் ஐயை யென்னும் ஆய்க்குல மூதாட்டியிடம் கண்ணகி அடைக்கலமாக நிறுத்தப் பெற்றாள்.

ஒற்றைச் சிலம்பைக் கைக்கொண்டு கோவலன் மதுரை வீதிக்கு வந்து, பொற்கொல்ல னொருவனைக் கண்டு விலை கூறினான். அவன் கோப்பெருந் தேவியின் காற்சிலம்பொன்றை முன்னரே திருடிக் கொண்டவனாதலின், வடிவத்தால் அதனோடொத்திருந்த கோவலன் கைச் சிலம்பைக் கண்டு, அவனைத் திருடனென்று அரசனிடம் அறிவிக்க அரசன் 'கள்வனைக் கொன்று காற்சிலம்பைக் கொணர்க' எனக் கட்டளையிட்டான்,

கோவலன் கொலைக்களத்துப் பட்ட செய்தியை அறிந்த கண்ணகி, தனக்கோர் நிலைக்களங் காணாதவளாய், நெடுங்கண்ணீர் உகுத்துப் பாண்டியன் முன் சென்று வழக்குரைத்தாள் என்பது வரலாறு. வழக்குரைப்பதற்குப் பாண்டியனது அரண்மனையை அடைந்த கண்ணகியை 'மயிடனது பிடர்த்தலைப் பீடமேறிய மடக்கொடியாகிய கொற்றவையல்லள்." சத்தமாதர்களில் ஏழாவதினையவளாகிய பிடாரியோ, இறைவனை ஆடல் கண்டருளிய பத்திரகாளியோ. தாருகனது பேருரத்தைக் கிழித்த பெண்ணோ அல்லள். ஆனால் அவர்களைப் போன்ற செற்றமும் செயிர்ப்பும் உடையவளாய்ப் பொற்றொழிற் சிலம்பொன்றை ஏந்திய கையினளாய்க் கணவனை யிழந்துகடை

யகத்து நிற்கின்ருர்' என்று வாயிலாளர் பாண்டியனுக்கு அறிவித்ததாக ஆசிரியர் கூறுவார்.

அறிவறை போகிய பொறியறு நெஞ்சத் திறைமுறை பிழைத்த பாண்டியனிடம், அவனது பிழையை, 'மணியரியுடையது எனது மற்றொரு காற்சிலம்பைக் காட்டி அதன் இணைச்சிலம்பு முத்து அரியுடைய கோப்பெருந்தேவியினது அல்ல' என்பதால் நிலைநாட்டிக் கண்ணகி அறிவுறுத்தினுள். பொறுமைக்கு எல்லையாயிருந்த கண்ணகி கணவன் கொலையுண்ட செய்தியைக் கேள்வியுற்றதும், காளிதேவியைப்போன்ற செற்றமும் செயிர்ப்புங் கொண்டாளாயினும், அறிவுக் கலக்கத்தை அடைந்தாளில்லை.

உண்மையை உணர்த்துதற்குரிய உறுதியான சான்றைப் பாண்டியன் முன்னே கண்ணகி காட்ட, அவனது குடை தாழ்ந்தது- கோல் தளர்ந்தது. 'பொன் செய்கொல்லன் தன்சொற் கேட்ட, யானே வாசன் யானே கள்வன், மன்பதை காக்குந் தென்புலங் காவல், என்முதற் பிழைத்தது கெடுகவென் ஞயுள்' என்று அரியணையிலேயே விழுந்து உயிர் துறந்தான்.

கோப்பெருந் தேவி 'கணவனையிழந்தோர்க்கு காட்டுவதில்லென்று, கண்ணகியின் இணையடி தொழுது வீழ்ந்தாள்.

அல்லவை செய்தார்க் கறங் கூற்றம், அல்லாதமாந்தர்க் கறங் கூற்றம்' என்பன நான்மணிக்கடிகையிலும் மூதுரையிலும் காணப்பெறுபவை, அந்த முறையில், அறக்கடவுளே கூற்ருய் நின்று பாண்டியனது உயிரை வெளவியதென்பது இங்கே நினைவிலிருத்தத் தக்கதாகும்.

நிகழத்தகாத ஒன்றை நிகழ்த்துமாறு செய்து கோல் கோடிய பாண்டியன் முன்னுகக் கண்ணகி நின்ற நிலையை அவளது கண்-கை-வடிவம்-கூந்தல் ஆகியவற்றை முன்னிருத்தி ஆசிரியர் அறிவுறுத்தும் பொழுது, அவ்வுறுப்புக்களுக்கு இயைபில்லா நிகழ்ச்சிகளைப் புணர்த்திக்கூறும் நயம் அறிந்து இன்புறற்குரியதாகும்.

நீலமலர், தேனைச் சிந்தும் இயல்புடையது. அது, இங்கே நீரைச்சிந்தியது. கை வளையலை அணிவது. அது, இங்கே சிலம்பை அணிந்தது. வடிவம் உயிர்கூடி இருப்பது, அது இங்கே

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

ஸிந்துமத மென்ற பெயர் எக்காலத்திலும் இருந்ததில்லை. இல்லாத அது எப்படி ஹிந்து மதமென்ற மரூஉ வாகக்கூடும்? சில சொற்களின் மூல வடிவம் உச்சரிப்பதற்குச் சிறிது கடினமாயிருக்கும். சமானிய மக்கள் அக்கடினத்தை நீக்கிஅவற்றைச் சுலபமாக உச்சரிப்பர். அதனல் உளவாயினவே மரூஉக்கள், திருநெல்வேலி யென்பதைவிட நெல்லையென்பதும், விக்கிரம சிங்கபுரம் என்பதைவிடச் சிங்கை யென்பதும், அருமருந்தன்ன என்பதைவிட அருமந்த என்பதும், பிறவும் சுலபமாக உச்சரிக்கப்படும். ஆனல் ஸிந்து என்பதைவிட ஹிந்து என்பது சுலபவுச்சரிப்பா? அன்று. ஸி என்ற எழுத்தைவிட ஹி என்ற என்ற எழுத்துக் கடின வுச்சரிப்பே யுடையது. ஆகலின் அம்மரூஉ உளதாதற்கு நியாயமில்லை ஸிந்து என்ற நதி ஆங்கிலத்தில் Indus என்றே சொல்லப்படும். Hindus (ஹிண்டஸ்) என்று சொல்லப்படுவதில்லை. ஸி, ஹிக்களைவிட இ சுலப வுச்சரிப்புடையது. இந்துவும் அந்நியாயத்தால் ஹிந்துவாக மாட்டாது. ஸிந்து என்ற மாகாணத்துக்கு இன்றும் ஸிந்துஎன்பதுதான் பெயர். ஆகவே அப்புதுப்பொருள் அச்சரித்திராசிரியன்மாரிடமுள்ள அறியாமைக்கே சான்றுமென்க. உலகிலுள்ள எந்த மதத்துக்கும் அதன் தெய்வம், ஆசிரியர், கொள்கை, பிரமாணநூல் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்று பற்றியே பெயரிருந்து வருகிறது. இடம் பற்றிய பெயர் எந்த மதத்துக்கு மில்லை. ஸிந்துஎன்ற இடம்பற்றிய பெயர் மாத்திரம் ஹிந்துவாகி மதப் பெயரானது விசித்திரந்தான். பாரதத்தைத் துண்டாட முயன்றனர் சில இசுலாமியர். அவருக்கு ஹிந்துஸ்தான் என்ற சொற்பொருள் நன்கு தெரியும். அதனற்றான் தாம் முயன்று பெற்ற பாரதப் பகுதிக்குப் பாகிஸ்தான் என அவர் பெயரிட்டுக் கொண்டனர். பாகிஸ்தான் என்பதற்குப் பரிசுத்த ஸ்தானமென்பதுபொருள்.

ஹிந்து என்பதற்கு அஹிம்ஸாதருமத்தை யுடையவன

என்ற பொருளை இன்னெருசாரார் கற்பிக்கின்றனர். அச்சொல்லைச் சம்ஸ்கிருதமெனக் கொண்டாரவர். சில சம்ஸ்கிருதச் சொற்களைத் தமிழெனக் கொண்டு அவற்றிற்குத் தமிழ்ப் போக்கிற் பதச்சேதம் பண்ணிப் பொருள்கூறிக் களிப்பர் தனித் தமிழ் வெறியர். அவர் போன்றாரே அச்சாராரும். ஹிந்து என்ற சொற்பொருளால் தன்மானம் போகிறதே, ஆயினும் அச்சொல்லைவிட்டுத் தன்னால் விலகமுடியவில்லையே, அதனால் அச்சொல்லுக்கொரு நல்ல பொருளையாவது கற்பித்துத் தொலைக்கலாம் என அவருளொருவன் கருதி அதற்குச் சம்ஸ்கிருதப் போக்கிற் பதச்சேதம் பண்ணி அப் பொருளைக் கற்பித்தான்போலும். ஒருக்கால் அச் சொல் சம்ஸ்கிருதமே, அப் பொருளுஞ் சரியானதே யெனக் கொண்டாலும் பூர்வ சமயங்களின் ஆசிரியன்மாரால் சமயப் பெயராக அது கொள்ளப்பட்டதேயில்லை யென்பது சத்தியம். 'ஆங்கில சரித்திரப் பேராசிரியர்கள்தான் முகலாயர்கள் இந்தியருக்குக் கொடுத்து வந்த இந்து என்ற பெயரை எடுத்துக்கொண்டு மேலும் மேலும் அழுத்தமாக வற்புறுத்தி...பிரிவினையை ஏற்படுத்துவதற்குக் காரண கர்த்தாக்களாக இருந்தார்கள். முகலாயர்கள் இந்தியாவைப் படை எடுப்பதற்கு முன்பு ஹிந்துக்கள் என்ற பெயரே கிடையாது' (15-7-56 காங்கிரஸ், ஜூன் வெளிவந்த 'பிலிம்இண்டியா'த்தமிழாக்கம்) 'இந்து மதம் என்று இக்காலத்தில் வழங்கும் பெயர் பல சமயங்களுக்கும் பொதுவானது. அப்படி ஒரு தனிச்சமயம் இல்லை. ஆனாலும் சைவம், வைணவம் முதலிய சமயங்கள் பலவற்றிற்குப் பொதுவாக அந்தப் பெயர் அயல்நாட்டவரால் வழங்கப் பெற்று, நாளடைவில் நாமும் வழங்கும்படியாயிற்று' (உள்ளம் கவர்கள்வன்) என்பன காண்க.

(தொடரும்)

## திருத்தம்

2-8-56 இதழில் பக்கம்-6, பத்தி-2, வரிகள் 22, 26 இலும் பக்கம்-7, பத்தி1, வரிகள் 10, 11, 27இலும் 'ஹிந்தி' என்றிருப்பதை 'ஹிந்து' எனவும், பத்தி-2 வரி29ல் 'ஹிந்து' என்றிருப்பதை 'ஸிந்து' எனவும் திருத்தி வாசிக்க.

உ
சிவமயம்
பாலருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி ஆடி - 25

# சுந்தரர் திருநாள்

ஏழாந் திருமுறை யாசிரியராகிய சுந்தரமூர்த்தி நாயனாரது குரு பூசைத் திருநாள், 12-8-56 ஞாயிற்றுக்கிழமையாகும். சமய குரவருள் மூன்றாவதவராக வைத்து வணங்கப்பெறும் இப் பெருந்தகையார் நமக்குச் செய்துள்ள பேருதவிக்கு, நாம் என்றும் கடமைப்பட்டிருக்கிறோம்.

சிவயோகத் திருநெறியைத் திருவாக்கினாலும், வாழ்க்கையாலும் அறிவுறுத்திச் சென்ற சிவஞானச் செல்வர் இவர். திருமாலோடு நான்முகனுந் தேடித் தேடொணாத் தேவனை, மனைவியின் ஊடல்தீர்க்கத் தூதுகொண்டு, அப்பெருமானது அன்புக் கெளிவரும் பெருங் கருணைத் திறத்தை, அகில உலகமும் அறியும்படி இவர் செய்தார்.

பெருமிழலைக் குறும்ப நாயனாரென்ற, சிவஞானச் செல்வர் இவரை நினைந்து-பேசி-வழிபட்டு, அழியாத முத்திப்பேற்றை அடைந்தாரென்று வரலாறு கூறுகின்றது. உலகியலில், பெறத்தக்க இன்ப நுகர்ச்சிகளை வெறுத்துத் துறவு பூண்டு ஒழுகினாலன்றி முத்தியைப் பெறமுடியாதென்று மற்றைச் சமயங்களிற் சில கூறுகின்றன.

சமய கோடிகளனைத்திற்கும் தலையாயதாய் ராசாங்கத் தமர்ந்துள்ள வைதிகசைவம், 'முத்தியின்பத்தை அடைவதற்கு உலகியலின்பங்கள் தடைசெய்யமாட்டா' என்று சொல்லும். அவ்வாறு உலகியலில், இணையற்ற நல்லின்பத்தை இறைவனது திருவருள் கொண்டு நம்பியாரூரர் நுகர்ந்தாரென்று அறிகின்றோம்.

மறுமைக்கு வேண்டியவற்றை மாத்திரமின்றி இம்மைக்கு வேண்டியவற்றையும் இறைவனைவேண்டியே அவர் பெற்றாரென்று, அவரது வரலாறும் திருவாக்கும் நமக்கு உணர்த்திக் கொண்டிருக்கின்றன. திருப்புகலூர், திருநாகைக் காரோண முதலியதிருத்தலங்களில் அவர் பாடிய திருப்பதிகங்களில் இவ்வுண்மையைக் காணலாம்.

வையத்து வாழ்வாங்குவாழ்ந்து, மறுமை வாழ்வுக்கு வழி தேடிக் கொள்ளக் கருதுபவர்களுக்கு நம்பியாரூரது திருவாக்கும் வரலாறும் நல்ல துணைசெய்யும் செய்தக்க அல்லனவற்றைச் செய்தால் சிவபெருமானது பெருந் தோழமையைப் பெற்றவராயினும், அதற்குரிய தீப்பயனை நுகர்ந்தே யாதல் வேண்டுமென்னும் அரிய உண்மையும், செய்தக்கனவற்றைச் செய்தால் எதிர்பாராதிருந்தாலும் அதற்குரிய பரிசு கிடைத்தே தீருமென்னும் பெரிய உண்மையும், இந்தச் சிவஞானச்செல்வரது வரலாற்றிலிருந்து அறியத் தக்கனவா யுள்ளன.

சம்புவின் அடித்தாமரைப் போதுகளையன்றிப் பிறிதேதையும் இறைஞ்சாத பெரு நோன்புடைய முனிவரே, நம்பியாரூரர் சென்ற திசைநோக்கிக் கைகூப்பித் தொழுதெழுந்து, உடல்முழுவதும்புளகம் போர்ப்ப நின்றாரென்றால், நம் போன்ற சாதாரண நிலையிலுள்ளவர்கள் அவரை மறந்து வாழ்வதற்கு வழியேது? தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளரது வாசமலர்மென் கழல் வணங்கி, அதற்காக வந்த நமது பிறப்பையும் வணங்குவோமாக.

---

## சாம்பவர் வடகரை

அருள்நெறித் திருக்கூட்டத்தார் வேண்டுகோளின்படி செங்கோல் ஆதீனகர்த்தர் ஸ்ரீ ல ஸ்ரீ ஆறுமுக சுந்தர சத்திய ஞான பரமாசாரிய சுவாமிகளும் தமிழ் நாடு அருள்நெறித் திருக்கூட்டத் தலைவர் இலஞ்சி வள்ளல் ஐ ஏ சிதம்பரப்பிள்ளை அவர்களும் 30-7-56ல் விஜயம் செய்தார்கள். பொதுமக்கள் மாலையிட்டு வரவேற்றார்கள், ஆலய வழிபாடு முடித்துக் கொண்டு ஐ எ சிதம்பரம் பிள்ளை தலைமையில் ஓர் பொதுக்கூட்டம் கூடியது. தலைவர் முன்னுரைக்குப்பின் சுவாமிகள் ஆலய வழிபாட்டின் தத்துவம்பற்றி விளக்கி சங்கீதம், கலை, ஓவியம், இவைகளே நாட்டைச் சிறப்பிப்பவை பொதுநல சேவையில் ஒவ்வொருவரும் ஈடுபடல் வேண்டும். அது தன்னலமற்றும் பிறர்க்குத் தீங்கு விளைக்காமல் பிரந்தாகன்மைபபக்கவல்லதாயும் இருக்கவேண்டும் என்றும் பேசினார்கள். திருக்கூட்டத் தலைவர் சுப்பையர் வந்தனோபசாரம் கூறியபின் கூட்டம் இனிது முடிந்தது

---

## காஞ்சிபுரம்

தேனமர் மலர்ச் சோலைத் திருக்காஞ்சி மாநகர்க்கண் சீரும் சிறப்பும் அற்புதங்களும் வாய்ந்த திருக்காமக்கோட்டத்தில் காஞ்சி மெய்கண்டார் கழகத்தினரால் ஆடி வெள்ளி வழிபாடு நடைபெற்றது. தேவாரத் திருமுறைகள் ஓதித் திருமுழுக்குத் தரிசனத்துக்குப்பின் கூட்டுப் பிரார்த்தனை நடைபெற்றது. மதுரை ஆதீனப்புலவர் மாமணி திரு வீ திருஞான சம்பந்த முதலியாரவர்கள் திருவிளையாடற்புராணச் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

இவ்விழா நிகழ்ச்சியைத் தேவகோட்டை உதயவிலாஸ் திரு கி கரு ராமசாமிநாதன் செட்டியாரவர்கள் நடத்திக் கொடுத்தார்கள். நன்றி கூறிய பின் வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

## திரு-கோச்சி அரசாங்கம்

திருவனந்தபுரம் ஆக 6—

திரு-கொச்சி அரசாங்கம் நடைமுறை ஆண்டில் இரண்டு கோடிரூபாய் கடன் எழுப்பத் திட்டமிட்டிருப்பதாக திரு-கொச்சி இராசப்பிரமுகரின் ஆலோசகர் திரு ஆர் பி எஸ் ராவ் இங்கு அறிவித்தார்.

## திருவாடானை

ஸ்ரீ ஆதிரெத்தினேசுவர சுவாமி கோயில் ஆடிப்பூர உற்சவம் ஏழாந் திருநாள் 5-8-56ல் அரிமளம் திருவி சீனிவாசன் பார்ட்டியார் இசையரங்கும் 6வ சாது ஸ்ரீ முருகதாஸ் சுவாமி பஜனையும் நடைபெற்றன. 12-8-56ல் பாலகவி இராமநாதன் செட்டியாரவர்கள் சொற்பொழிவு நடைபெறும்.

### திருக்கல்யாண மண்டபப்படி

தேவகோட்டை ராம. அரு. அரு. ராம. எஸ்டேட் டிரஸ்ட்ஸ் ஆபீசிலிருந்து வழக்கம்போல் 10-8-56ல் திருக்கல்யாண மண்டபப்படி நடத்தப்பெறும். தேவாரக்கோஷ்டி, விசேஷ மேளம், பாண்டு, பாட்டுக் கச்சேரி, வாணவேடிக்கை முதலியவைகளும் நடைபெறும். மாலையில் திருமதி, என். எல். கானசரசுவதி பார்ட்டியார் இசையரங்கு நிகழும்.

## காரைக்குடி

நகரச்சிவன்கோயில் ஆடிப்பூரத் திருநாளைமுன்னிட்டு அறுபத்து மூவர் குருபூசை மடத்தில் 2-8-56முதல் 6-8-56 வரை சமயப் பேரவை நடைபெற்றது. திருவாளர்களான ந. விசுவநாதன், பண்டித முத்துவேங்கடாசலமய்யர், பரா. அழகர்சாமி, மு. கற்பகவிநாயகம், திருலோகசீதாராம், இராம, கோபிநாதன் சா. கணேசன், வி, கே. சி. நடராஜன், எஸ். மகராசன், வீரசிவம், பாலகவி இராமநாதன் செட்டியார், சேவு. மெ. மெய்யப்பசெட்டியார் ஆகியோர் விரிவுரைகள் நிகழ்ந்தன.

## இலஞ்சி

உயர்நிலைப் பள்ளியில் மாணவர்கள் இலக்கிய மன்ற விழா 31-7-56ல் செங்கோல் ஆதீனகர்த்தர் தலைமையில் நடைபெற்றது. தமிழ்நாடு அருள்நெறித் திருக்கூட்டத் தலைவர் ஐ எ சிதம்பரம்பிள்ளை எம் ஏ அவர்கள் வரவேற்புரை கூறினார்கள். சுவாமிகள் இலக்கியச் சொற்பொழிவு செய்தார்கள். ஐ டி சிதம்பரம்பிள்ளை அவர்கள் கம்பராமாயணத்தின் பாத்திரங்கள் என்ற தலைப்பில் சொற்பொழிவு செய்தார்கள்.

பள்ளியின் தலைமைத் தமிழாசிரியர் வந்தனோபசாரம்கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

(5ம் பக்கத் தொடர்ச்சி)
உயிர் குடிபோக இருந்தது. கூந்தல் கட்டி முடியப் பெற்றிருப்பது. அது, இங்கே காடுபோல் விரிந்து கிடந்தது.

தனக்கு வந்த பெருந் துன்பத்தைக் கண்ணீராலும், பாண்டியனது கோல் கோடியதைக் கைச்சிலம்பாலும் புலப்படுத்திய கண்ணகியின் கற்பு மேம்பாடு ஆவிகுடிபோன அவளது வடிவத்தாலும் விரிந்துகிடந்த கூந்தலாலும் நன்கு புலப்படுத்துகிறதல்லவா?

கூடலான் கூடாயினான் என்பது, கூடுஅலான் கூடு ஆயினான் என்று பிரிக்கவும் இடமாகி, அணியமைந்திருக்கிறது. வல்வினை வளைத்த கோலை மன்னவன் செல்லுயிர் நீத்துச் செங்கோல் ஆக்கியதாதலின், அவனை இறந்தானென்று சொல்லாது கூடாயினான் என்று அழகுபெற ஆசிரியர் கூறியிருக்கின்றார்.

## பாராட்டுக் கூட்டம்

நான்கு மாதங்களாக மலேயா நாடுகளில் மேன்மைகொள் சைவசமயப் பிரசாரப் பணியாற்றி வந்துள்ள அருண்மொழியரசு, முத்தமிழ் வள்ளல், மதுரையாதீன மகாவித்துவான் திருமுருக, கிருபானந்தவாரியாரவர்களுக்கு 7-8-56 காலையில் மதுரைப் புகைவண்டி நிலையத்தில் வரவேற்பும், முற்பகலில் திருக்கோயில் வழிபாடு, ஆதீன மடாலய வழிபாடும் நிகழ்ந்தன. மாலையில் வடக்காடி வீதி திருப்புகழ்மண்டபத்தில் ஸ்ரீலஸ்ரீசோமசுந்தரதேசிகபரமாசாரிய சுவாமிகள் தலைமையில் பாராட்டுக்கூட்டம் நடைபெற்றது. பல கழகங்களின் சார்பில் பாராட்டு இதழ்கள் வாசித்தளிக்கப் பெற்றன. பெரியோர் பலரது பாராட்டுரைகள் நிகழ்ந்தன.

## படித்தோர்!

சிவஞானபோத உரைச் சுருக்கம்: உரையாசிரியர், திருமுறைக் கலைஞர், வித்துவான் கி. பட்டுச்சாமி ஓதுவாரவர்கள். திருச்சிராப்பள்ளி கிடைக்குமிடம். அருள்நந்தி நிலையம், வரசநகர், திருச்சிராப்பள்ளி- விலைஅணா-3

சைவசித்தாந்த சாத்திரத்தலைமணியாக விளங்குகின்ற சிவஞானபோதத்திற்கு நல்லதொரு பதவுரையும் கருத்தும். இவ் வெளியீட்டினால்பெற்றுள்ளோம்.

# கண்ணீர் அழித்த கடிதம்

சித. சேதுராமன்

அந்தச் சாலை, அமைதியை அணைத்திருந்தது. பக்கத்திலிருந்த மரங்களின் அசைவு ஓசை கூடக் கிடையாது. பொழுது புலர்வதற்கு இன்னும் சிறிது நேரமே இருந்தது. பறவைகள் கூட, அந்த அமைதியைக் கெடுக்க எண்ணவில்லைபோலும்!

'டக்...டக்' என்று குதிரை வரும் ஓசைகேட்டது. முகமெல்லாம் வியர்வை கொட்ட, கையில் ஓலையொன்றை வைத்துக் கொண்டு ஓர்உருவம் குதிரையை வேகமாகச் செலுத்திவந்தது.

நகரத்தை நெருங்கிக் கொண்டிருந்தான் அக்குதிரையில்வந்தவன். 'யார்...நீ?' என்ற குரலோசை அந்தக் குதிரையில் வந்தவனைத் திகைக்கச்செய்தது. திரும்பி நோக்கினன். இரண்டு உருவங்கள் கையில் கத்திகளை வைத்துக் கொண்டு நின்றன. அதிலிருந்தே அவர்கள் அக்காட்டுப் படைவீரர்கள் என்று தெரிந்துகொண்டான்.

'நான் மகேந்திரபுரியின் பணியாள்' என்று மெதுவான குரலில் கூறினன் குதிரை வீரன். இரு உருவங்களும் ஆச்சரியப்பட்டன.

'உன் பெயரென்ன?' என்றான் இரண்டுபேர்களில் ஒருவன்.

'மதிராயன். நான் உங்கள் மன்னரைச் சந்திக்கவேண்டும்' என்றான் சிறிது அலட்சியமாக. அலட்சியத்திற்கு அர்த்தமும் இருக்கத்தான் செய்தது.

மகேந்திரபுரிக்கு உட்பட்ட பல நகரங்களிருக்கின்றன. மகேந்திரபுரின் கட்டளையைக் கடமையிற் காட்டக் காத்துக் கிடக்கும்நகரங்களில் தனபாலன் கோட்டையும் ஒன்று. அந்த நகரத்தின் மன்னன்தான் சுந்தரவர்மன்.

மதிராயனை அழைத்துக் கொண்டு மன்னனிடம் சென்றார்கள். சுந்தரவர்மனிடம் ஓலையை நீட்டினன் மதிராயன். ஓலை

வாசிக்கத் தொடங்கினர்-சுந்தரவர்மர் 'சுந்தரவர்மா! நீ தீட்டிய ஓலையைக் கண்டேன். உளறியிருக்கிறாய்-அதில். 'நான் ஒரு சிற்றரசன்தானே, என்மகளையே மணம்செய்துகொள்வேன்என்று ஓலை விடுத்திருக்கிறாரே!' என்று திகைக்க வேண்டிய நீ, என் சொல்லை அலட்சியப்படுத்தி வரைந்திருக்கிறாய். சிந்தித்துப் பார்-மறுத்தால்-போர்' படித்து முடித்தார் ஓலையை.

'போரில் மாள்வேனே தவிர, இந்தத் தள்ளாடும் கிழவருக்கு என் மகளைத் தானம் செய்ய மாட்டேன்' என்று கூறியபடியே தன் மகளைச் சந்தித்து, 'சூரியா! கலங்காதே. திருமணமா? போரா? என்ற வினாக்களுக்குப் 'போர்' என்ற புனித விடையைத் தேர்ந்தெடுத்துவிட்டேன். நீ அவரை மணக்கவேண்டாமம்மா-மணக்கவேண்டாம்.

* * *

மாலைத் தென்றலில் வெற்றிக் கொடியைப் பறக்கவிட்டான் மகேந்திரபுரி மன்னன் மார்த்தாண்டவர்மன். போர்க்களமே புழுதிக்காடாகத் திகழ்ந்தது. மார்த்தாண்டன் பார்த்துக் கொண்டே வந்தான். அளவற்ற ஆசைகொண்டு, இடையே மாண்ட இளைஞர்கள் எத்தனை பேர்? தம் மக்களது வீரச் செயல்களைப்பற்றிக் காதால் கேட்டு, களிப்படைந்திருக்க நினைத்த முதியோர்கள்தான் எத்தனை பேர்? மார்த்தாண்டவர்மன் எதிரிகளின் கூடாரத்திற்கு விரைந்து சென்றான். காலில் ஏதோ தட்டியது. கூர்ந்து நோக்கினான். மார்பிலே ஈட்டிதாங்கி வீரமரணமடைந்து கிடந்தான்-சுந்தரவர்மன்.

'சுந்தரவர்மா! கர்வம்கொண்டு மணமுடிக்க மறுத்தாயே, இப்பொழுது பார்த்தாயோ! நானே சென்று உன்மகளைத் திருமணம் செய்துகொள்கிறேன்' என்று கூறி, ஓடினான் சூரியா இருக்குமிடம் நோக்கி.

கூடாரத்தின் கதவு திறக்கப்பட்டிருந்தது- உள்ளே சென்றவன் திகைத்துநின்றான். மார்பிலே கத்தியைப்பாய்ச்சி மாண்டு கிடந்தாள் சூரியா. அவள் மார்பைத்தழுவியகத்தியில்ஓலைஒன்று கட்டியிருந்தது. வேகமாகஅதை அவிழ்த்துப் படிக்க ஆரம்பித்தான் 'மார்த்தாண்டவர்மரே! எனக்காகப் போரிட்டு எத்தனை உயிர்கள் மாண்டன. அவ்வுயிர்களின் ஆசைகள்தான் எவ்வ

ளவு-எவ்வளவோ? எண்ணி னீரா-அதைப்பற்றி. அதே போல் உம் எண்ணமும் ஈடேறு வண்ணம் திரும்பிச் செல்லும். உமக்கு நானளிக்கும் பரிசு அதுவே!' அவன் கண்களிலிருந்து வழிந்த கண்ணீர் கடிதத்தைக் கழுவிக்கொண்டு சென்றது.

---

## உங்களுக்குத் தெரியுமா?

இந்தியாவிலிருந்து 1955-56ல் 6.27 கோடி ரூபாய் மதிப்புள்ள 13.63 லட்சம் டன் இரும்புக் கனி ஏற்றுமதியாயிற்று.

1955-56ல் தேயிலை மீது விதிக்கப்பட்ட ஏற்றுமதி லெஸ் வரிமூலம் சுமார் 1,58,75,976 ரூபாய் வசூலாயிற்று; முந்திய வருஷத்தில் இந்த வகையில் 1,28,52,580 ரூபாய் கிடைத்தது. இத்தொகைகளில் வசூலிப்புச் செலவுகள் சேர்க்கப்படவில்லை.

1955—ல் இந்தியாவில் 33,59,960 ரூபாய் மதிப்புள்ள சிமிட்டித் தயாரிப்பு யந்திரசாதனங்கள் உற்பத்தி செய்யப்பட்டன.

வெளிநாடுகளில் உருக்குத் தொழில்நுட்பப் பயிற்சியளிப்பதற்காக இதுவரையில் 159 எஞ்சினீயரிங் பட்டதாரிகள் தெரிந்தெடுக்கப்பட்டுள்ளனர். அவர்களில் 79 பேர் ஏற்கெனவே மேற்கு ஜெர்மனிக்குப் போய் விட்டனர்.

இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் புதிதாக 100 கலங்கரை விளக்கங்களை நிர்மாணிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

1956-57ல் அம்பர் சர்க்காத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காக இந்திய சர்க்கார் சுமார் 3.27கோடி ரூபாய் அநுமதித்துள்ளனர். 75,000 அம்பர் சர்க்காக்களைத் தயாரிப்பதற்கும் மேலும் பல உற்பத்திப் பயிற்சி நிலையங்களை ஏற்படுத்துவதற்கும் அத்திட்டத்தில் வகை செய்யப்பட்டிருக்கிறது.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.